


# காமினியா

ரிஜிஸ்டர்ட் **ஆயில்** ரிஜிஸ்டர்ட்

*காமினியா ஆயிலின்* (ரிஜிஸ்டர்ட்) ஜீவசக்தியுள்ள சரக்குகள். இந்த பிரசித்தி பெற்ற ஹேர் ஆயிலை மற்றெல்லா ஹேர் ஆயில்களினின்றும் மாறுபட்டு விளங்கச் செய்கிறது. கேசத்தை வளப்படுத்துவதற்கு அவசியமானவற்றைத் தவிர வேறொன்றுமே இல்லை. இந்த பாட்டிலில் பூராவும் காமினியா ஆயில்தான். வேறொன்றும் இத்துடன் கலக்கப்படுவதில்லை. இதில் அடங்கியுள்ள தைலம் பூராவும் உபயோககரமாக செலவழிக்கப் படுகிறது. எனவே, நீங்கள் *காமினியா ஆயில்* (ரிஜிஸ்டர்ட்) வாங்குவதானுல் உங்கள் பணத்திற்கான முழு மதிப்பையும் பெறுகிறீர்கள்.

*சாம்பிள் பெற தபால் செலவிற்கு அணா 4 ஸ்டாம்பு அனுப்பவும்.*

ஆங்கிலோ இந்தியன் டிரக் & கெமிகல் கோ.

பம்பாய்-2

# அண்ணாமலை நகரில் அகில இந்திய எழுத்தாளர்கள்



பகீரதன்

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் ராஜா ஸர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட அண்ணாமலைப் பல்கலைக் கழக ஸ்தாபனம் இன்று பெரிய ஆலவிருட்சம் போல் பல்கிப் பெருகிச் சிதம்பரத்துக்குக் கிழக்கே உள்ள நூற்று இருபத்தைந்து ஏக்கரா நிலத்தில் தழைத்துப் படர்ந்து கம்பீரமாக நிற்கிறது. ஆண்டு தோறும் அதன் அறிவுக் கனிகளைப் புசித்து நூற்றுக்கணக்கான மாணவர்கள் பட்டம் பெற்றுச் செல்கின்றனர். ஆலமரம் தன் நிழலில் சில சமயம் வழிப்போக்கர்களுக்கும் இடம் அளித்து உதவுவதுபோல சென்ற மாத மத்தியில் அகில இந்திய எழுத்தாளர்களுக்குத் தங்க இடம் அளித்தது. மூன்று தினங்கள் அண்ணாமலை சர்வ கலாசாலைக் கட்டிடங்கள் எல்லாவற்றையும் எழுத்தாளர்கள் ஆக்ரமித்துக் கொண்டிருந்தார்கள். பேனா மாநாடு நடத்தினார்கள்.

அந்த மூன்று தினங்களும் அகில இந்தியாவிலிருந்தும் அங்கு வந்து சேர்ந்திருந்த எழுத்தாளர்கள் கல்யாண வீட்டில் தங்கி இருந்தது போல சகல வசதிகளுடன் விருந்து உபசாரங்கள் பெற்றுக் குதூகலமாக இருந்தார்கள். அவர்களில் சம்பந்தி வீட்டுக் காரர்களைப் போல் அதிகாரம் செய்து கொண்டும் குறை சொல்லிக் கொண்டும் இருந்தவர்கள் சிலரும் உண்டு.

சாதாரணமாக ஒற்றுமை ஏற்படக் கூடாதவர்களின் கூட்டத்தைக் குறிப்பிட்டால் எழுத்தாளர்கள் முதலில் வரக் கூடியவர்கள். காரணம் எழுத்தாளர்களுக்குள் அபிப்பிராய பேதங்களும் கொள்கை வித்தியாசங்களும் நிறைய இருப்பது தான். அது இயற்கை. எல்லா எழுத்தாளர்களும் ஒரே அபிப்பிராயமும், ஒரே கொள்கையும் உடையவர்களாக இருந்தால் உலகில் அநேக எழுத்தாளர்கள் தோன்றுவதற்கு அவசியமே ஏற்படாதல்லவா! எனவே ஒவ்வொரு எழுத்தாளரும் தங்களுக்கென்று தனி அபிப்பிராயத்தையும், கொள்கையையும் உடையவர்களாயிருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. அப்படிப்பட்ட அபிப்பிராய வேற்றுமைகளும் கொள்கை வித்தியாசங்களும் கொண்ட எழுத்தாளர்கள் ஒன்று சேர்ந்து ஒற்றுமையாகக் காரியங்களை நடத்துவது என்பது கஷ்டமான காரியம்தான்.

இந்தக் கஷ்டமான காரியத்தைச் சர்வதேச எழுத்தாளர் சங்கமான பி. இ. என். என்ற மூன்று ஆங்கில எழுத்துக்களைக் கொண்ட பேனா சபை ஓர் அளவு சாதித்து வெற்றி பெற்று வருகிறது என்று சொல்லலாம். இந்தச் சர்வ தேச பேனா சபைக்கு உலகத்தில் ஐம்பது இடங்களில் கிளைச் சங்கங்கள் இருக்கின்றன.

பி. இ. என். இந்தியக் கிளைச் சங்கத்தை பம்பாய் நகரைச் சேர்ந்த ஸ்ரீமதி ஸோபியா வாடியா என்ற அம்மையார் திறம்பட நடத்தி வருகிறார். இந்தச் சங்கத்துக்கு டாக்டர் ரவீந்திரநாத் தாகூர் முதல் தலைவராக இருந்தார். அவருக்குப் பின் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு தலைவரானார். இப்பொழுது நம் உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் தலைவராக இருந்து தொண்டாற்றி வருகிறார். ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு அவர்கள் அதன் உப தலைவராக இருந்து சங்கத்தின் பெருமையை மேலும் உயர்த்தி வருகிறார்.

எழுத்தாளர்கள் பலர் ஒன்று சேர்ந்து மகாநாடு கூடுவதால் பல நன்மைகள் உண்டாக இடம் இருக்கிறது. எழுத்தாளர்கள் ஒருவரை ஒருவர்

அறிமுகம் செய்துகொள்ள முடிகிறது. பல சிக்கலான விஷயங்களை விவாதித்துப் பயன்பெற முடிகிறது. எழுத்தாளர்களின் சிந்தனைகள் செயல்படுவதற்கு வேண்டிய சூழ்நிலை ஏற்படுகிறது.

அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டின் மூன்றாவது மகாநாடு இந்திய பேனா சங்கத்தின் ஆதரவில் சிதம்பரம் அண்ணாமலை நகரில் சென்ற மாதம் நடைபெற்றது. ஏப்ரல் 16, 17, 18 ஆகிய மூன்று தினங்கள் வெகு சிறப்பாக நடந்தது. இந்த மகாநாட்டுக்கு இந்தியா தேசத்தின் பல பகுதிகளில் இருந்தும் எழுத்தாளர் பலர் அண்ணாமலை நகருக்கு விஜயம் செய்திருந்தார்கள். பாரத நாட்டின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு மகாநாட்டைத் துவக்கி வைத்தார். இந்தியாவின் உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அக்ராசன சிம்மாசனத்தில் வீற்றிருந்து மகாநாட்டைத் திறம்பட நடத்தி வைத்தார்.

இம் மகாநாட்டைக் குறித்துத் தமிழ் நாட்டில் உள்ள நாம் பலவிதத்திலும் பெருமை கொள்ள இடம் உண்டு. இந்தியப் பேனா சங்கத்தின் துணைக் காரியதரிசியாகத் தமிழ் நாட்டைச் சேர்ந்த ஸ்ரீ எம். ஆர். ஜம்புநாதன் அவர்கள் கடந்த மூன்று ஆண்டுகளாகத் தொண்டாற்றி வருகிறார். ஸ்ரீ ஜம்புநாதன் தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மூன்று பாஷைகளும் நன்கு அறிந்தவர். தமிழ் நாட்டின் பெருமைகளையும், தமிழரின் உயர்ந்த பண்புகளையும் வடநாட்டில் உள்ளவர்கள் அறிந்து கொள்ளும் வகையில் அருமையான முறையில் பணியாற்றி வருகிறார். அவருடைய தீவிர முயற்சியால்தான் அகில இந்திய எழுத்தாளர் மகாநாடு இந்த ஆண்டு தமிழ் நாட்டில் நடந்தது. அதன் மூலம் தமிழ்நாடு உலக மக்களின் கவனத்தைக் கவர்ந்தது.

அண்ணாமலை நகரில் அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்த மிகப் பெரிய பந்தலில் அகில இந்திய எழுத்தாளர் மகாநாடு நடைபெற்றது. பந்தல் நிறைந்து வழியும்படி மக்கள் வந்து கூடியிருந்தனர். பாரதநாட்டின் பல பகுதிகளில் இருந்தும் எழுத்தாளப் பிரதிநிதிகள் சுமார் நூற்றைம்பது பேர் வந்திருந்தனர். தமிழ் நாட்டின் பல பகுதிகளில் இருந்து ஐம்பதுக்கு மேற்பட்ட பிரபல எழுத்தாளர்கள் மகாநாட்டில் கலந்து கொண்டனர்.

முதல் நாள் மகாநாட்டின் ஆரம்ப வைபவத்தில் இவர்களில் மிகப் பலர் பந்தலில் உட்கார இடம் பிடிப்பதற்கு மிகவும் கஷ்டப்பட வேண்டியதாயிற்று. ஜவாஹர்லால் ஜியின் விஜயத்தை முன்னிட்டுப் பிரமுகர்கள் பலர் மேடையையும் முன் வரிசை இடங்களையும் ஆக்கிரமித்துக்கொண்டபடியால் எழுத்தாளர்கள் பாடு மிகவும் திண்டாட்டமாகப் போய் விட்டது. ஆயினும் அவர்கள் அந்தச் சந்தர்ப்பத்தைத் தங்கள் நகைச்சுவைச் சம்பாஷணைக்குப் பயன் படுத்திக் கொண்டார்கள்.

மேடையில் வீற்றிருந்தவர்களைத் தனித்தனியே குறிப்பிட்டு எழுத்தாளர்கள் "இவர் என்ன எழுதி யிருக்கிறார்!" "அவர் என்ன எழுதி யிருக்கிறார்! என்று ஒருவருக் கொருவர் கேட்டுக் கொண்டனர்.



தலைமை உரை நிகழ்த்திய டாக்டர் ராதாகிருஷ்ணன்

"ஏன்! அவர் தாம் தலைமை வகிக்கும் ஜவுளி வர்த்தகச் சங்கத்தின் வருஷாந்திர அறிக்கை எழுதியிருக்கிறார்!" என்றார் ஒருவர். "இவர் சென்ற வருஷம் ஜனாதிபதிக்கு ஒரு மகஜர் எழுதினார்" என்றார் இன்னொருவர். "இல்லை, இல்லை! இவர் மகஜர் எழுதவில்லை. யாரோ எழுதிய மகஜரில் இவர் தமது பெயரை எழுதினார்!" என்றார் மற்றொருவர். "அதோ இருக்கிறாரே, அந்த மாஜி நீதிபதி கோர்ட்டில் பல தீர்ப்புக்கள் எழுதினார்!" "இதோ அமர்ந்திருப்பவர் வெளியூர்களுக்குப் போகும்போது தமது வீட்டாருக்குக் கடிதங்கள் எழுதியிருக்கிறார்!" "இவர் பள்ளிக்கூடத்தில் படித்தபோது பரீட்சை எழுதியிருக்கிறார்!" என்று இப்படி யெல்லாம் பேசிச் சந்தோஷப்பட்டுக் கொண்டார்கள்.

மகாநாடு ஆரம்பமாவதற்கு முன் அதிசயம் ஒன்று நிகழ்ந்தது. அதுவரையில் ஜகஜ்ஜோதியாக விளங்கிய மகாநாட்டுப் பந்தல் திடீர் என்று இருட்டி விட்டது. இதைப் பற்றிப் பிற்பாடு விசாரித்ததில் ஆசியாவின் ஜோதியாகிய நேரு வரப் போகிறார் என்பதை யறிந்து மின்சார ஜோதி பயந்து நடுங்கி அணைந்து விட்டதாகத் தெரிவித்தனர். நல்ல வேளையாக ஒரேயடியாக அணைந்து போகாமல் ஆசியாவின் ஜோதி மகாநாட்டுக்கு வருவதற்குள் அவரை வரவேற்று முகமன் கூறுவதுபோல மின்சார ஜோதி மீண்டும் வந்ததை எண்ணிப் பாராட்டுகிறேன்.

ஸ்ரீ சிதம்பரேச தீட்சிதர் தம் இனிய குரலில் கம்பீரமாகப் பிரார்த்தனை கீதம் பாட எழுத்தாளர் மகாநாடு ஆரம்பமாயிற்று.

அண்ணாமலை சர்வ கலாசாலை உப அத்யட்சகர் டாக்டர் ஸி. பி. ராமசாமி ஐயர் அவர்கள் எல்லாரையும் வரவேற்றுத் தமக்கே உரிய முறையில் கம்பீரமாகப் பேசினார். அண்ணாமலைப் பல்கலைக் கழகம் செய்து வரும் பல பணிகளைப் பற்றியும் இனிச் செய்ய உத்தேசிக்கும் பணிகளைப் பற்றியும் அவர் இடையிடையே குறிப்பிட்டது இயல்புதான் அல்லவா! பேனா சங்கக் காரியதரிசி ஸ்ரீ எம். ஆர். ஜம்புநாதன் உலகின் பல பாகங்களிலிருந்து எழுத்தாளர்கள் மகாநாட்டுக்கு வந்திருந்த வாழ்த்துச் செய்திகளை வாசித்தார்.

ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு நீண்ட நெடுந் தூரம் விமானத்திலும், படை படைக்கும் வெய்யிலில் பல மைல்கள் காரிலும் பிரயாணம் செய்து வந்ததால் தானோ என்னவோ, உற்சாகமின்றி இருந்தார். அவர் முகத்தில் எப்பொழுதும் தவழும் குதூகலம் இல்லை. மிகவும் களைப் படைந்தவராய்ச் சோர்வுடன் காணப்பட்டார். ஏன்! யார் பேரிலாவது கோபித்துக் கொண்டு எரிந்து விழுவதற்குக்கூட அன்று அவருக்கு உற்சாகம் இல்லை. அவருடைய பிரசங்கமும் சுமாராகத்தான் இருந்தது.

டாக்டர் ராதாகிருஷ்ணன் எப்போதும்போல் அருமையான ஆங்கில நடையில் அழுத்தம் திருத்த மாகப்




தில்லைப் பதியில் இந்தியப் பிரதமர்

பேசினார். ஹைட்ரஜன் குண்டைப் பற்றி வேறு எப்படிப் பேச முடியும்! உலகெங்குமுள்ள பேனா வீரர்கள் ஹைட்ரஜன் குண்டைத் தாக்குவதில் முனைய வேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக் கொண்டார். அதைக் கேட்ட பேனா வீரர்கள் பலர் தத்தம் பேனா முனைகளைக் கூர்மையாக்கிக் கொண்டார்கள்.

ஸ்ரீமதி ஸோபியா வாடியா வந்திருந்த அனைவருக்கும் வந்தனோபசாரம் கூறினார்.

"பேனாச் சங்கத்தின் சுதந்திர சாஸனத்தை மட்டுந்தான் படிக்கப் போகிறேன். அதற்கு இரண்டொரு நிமிஷங்கள்தான் தேவை!" என்று பூர்வ பீடிகை போடுவதிலேயே ஸ்ரீமதி வாடியா பத்து நிமிஷங்களுக்கு மேல் செலவு செய்து விட்டார்.



வரவேற்புரை வழங்கிய டாக்டர் ஸி. பி. ராமசாமி ஐயர்

கண் காட்சியில் வைக்கப் பெற்றிருந்தன. உலகத்தின் பிரபல எழுத்தாளர்கள் கவிஞர்கள் ஆகியவர்களின் படங்கள் இடம் பெற்றிருந்தன. சென்னைப் பொருட்காட்சியில் "பாரதி கலைக் காட்சி" நடத்தித் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தங்கப் பதக்கம் பரிசு பெற்ற ஸ்ரீ ரா. அ. பத்மநாபன் பாரதி கண் காட்சியை ஏற்பாடு செய்திருந்தார். இந்தக் காட்சியின் மூலம் அகில இந்திய எழுத்தாளர்கள் தமிழ் மக்கள் தங்கள் கவிகளை எவ்வளவு உயர்ந்த முறையில் போற்றுகிறார்கள் என்று தெரிந்து கொள்ளும்படியான ஒரு அருமையான வாய்ப்பு ஏற்பட்டது.

மறு நாள் காலை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் கம்பீரமான சாஸ்திரியார் மண்டபத்தின் மாடி ஆலோடியில் அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டின் கூட்டம் ஆரம்பமாகியது.

இந்தக் கூட்டத்துக்கு டாக்டர் ஸி.பி. ராமசாமி ஐயர் தலைமை தாங்கினார். பாரதப் பண்பாட்டின் பழைய மகா காவியமான இராமாயணம் இந்தியப் பிரதேச மொழிகளில் எப்படியெல்லாம் ஆதிக்கம் செலுத்தியிருக்கிறது என்பதைப் பற்றிய ஆராய்ச்சியை டாக்டர் ஸி. பி. ராமசாமி ஐயர் தமக்கே உரிய தனிப் பாணியில் மிக அழகாகப் பேசி ஆரம்பித்துவைத்தார். டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்களும் ராமாயணத்தின் பெருமையை விளக்கிக் கூறினார். வங்காளம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராத்தி, மைதிலி, ஒரியா, பஞ்சாப், சிந்தி, தமிழ், தெலுங்கு, உருது ஆகிய மொழிகளில் உள்ள ராமாயண காவியச் சிறப்புகளைப் பற்றி அந்தந்த மொழிகள் சார்பாக ஒவ்வொரு பிரதிநிதியும் பேசினார்கள்.

இந்த அருமையான இலக்கியக் கூட்டம் அமைதியான சூழ்நிலையில் நடந்திருக்க வேண்டும். அதே சமயத்தில் கீழே சாஸ்திரியார் மண்டபத்தில் மாணவர்களுக்காக ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு பேச ஏற்பாடாகி இருந்தது. மேலே இலக்கியக் கூட்டம் நடக்கும் வேளையில் கீழே நேரு வந்து விட்டார். ஒரே சத்தமும், ஜே கோஷமும், கர கோஷமும் கலந்து வந்து இலக்கியக் கூட்டத்தை அவசரமாக ஒரு முடிவுக்குக் கொண்டு வர வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது.

சாஸ்திரியார் மண்டபத்து மாடியில் இன்னொரு பகுதியில் இருந்த புத்தகக் கண்காட்சியைச் சென்னை கவர்னர் ஸ்ரீ பிரகாசா திறந்துவைத்தார்.

புத்தகக் கண் காட்சிக்குள் பாரதிக் காட்சியும் இருந்தது. ஏராளமான தமிழ் ஆங்கில நூல்கள்

அன்று பிற்பகல் கோகலே மண்டபத்தில் சிறு கதைகள் வளர்ச்சியைப் பற்றி ஆராய்ச்சிக் கூட்டம் நடந்தது. இந்தக் கூட்டத்துக்கு இந்திய சர்க்கார் கல்வி இலாகாவைச் சேர்ந்த ஸ்ரீ ஹுமாயூன் கபீர் தலைமை தாங்கினார். சிறுகதை ஆராய்ச்சித் திருப்பணியில், காலையில் ராமாயண இதிகாச ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த பதினான்கு மொழிக்காரர்களும் பங்கெடுத்துக் கொண்டார்கள். ஒவ்வொருவரும் தத்தம் மொழியில் சிறு கதை வளர்ச்சியைப் பற்றிப் பெரிய சொற்பொழிவு நிகழ்த்த ஆயத்தமாக வந்திருந்தார்கள். ஆனால் ஸ்ரீமதி ஸோபியா வாடியா நேரம் ஆனதைக் குறிப்பிட அடிக்கடி மணி அடித்து அவர்களை உட்காரச் செய்து விட்டார். "இவர் மட்டும் நேற்றைக்கு நிறுத்தாமல் பேசிக் கொண்டு போனாரே!" என்று சில எழுத்தாளர்கள் முணுமுணுத்தார்கள்.

இந்த மாதிரி சூழ்நிலையில் ஒரு பிரசங்கி சபையோரின் உற்சாகமான கர கோஷத்துக்கிடையே 'ஜம்'மென்று மேடைக்கு வந்தார்.

"தமிழில் சிறு கதைகள்" என்னும் பொருள் பற்றி அவர் கணீர் என்று பேசினார். தொல்காப்பியத்தில் உள்ள "பொருளொடு புணர்ந்த நகைமொழி" என்ற குறிப்பு உரை நடை சிறு கதைக்கு வேண்டிய அடிப்படையைக் கோலியிருக்கிறது என்று ஆரம்பித்து, இன்றுவரையில் உள்ள சிறுகதைகளைப் பற்றி ஆராய்ச்சி நிறைந்த சொற்பொழிவாற்றினார். நவீன சிறு கதைகள் வளர்ந்த முறைகளைப் பற்றிக் கூறி விட்டுச் சிறு கதை ஆசிரியர்கள் தமிழுக்கு ஆற்றி வரும் சேவையைக் குறிப்பிட்டு மகிழ்ந்தார். பாரதியார், கு. ப. ரா., புதுமைப் பித்தன், சுத்தானந்த பாரதியார். மு. வரதராசனார், பெ. தூரன், கி. வா. ஜகந்நாதன், கு. ராஜவேலு, ஜீவா, அண்ணாதுரை, அகிலன், விந்தன், மாயாவி, நாடோடி, கலையாழி, லக்ஷ்மி, அநுத்தமா முதலியவர்களின் பெயர்களைக் குறிப்பிட்டு அவர்கள் சிறு கதைகளுக்கு ஆற்றி வரும் தொண்டைப் போற்றினார். இலங்கை எழுத்தா

1. தில்லைப் பொன்னம்பலத்தின் காட்சி. 2. ஜவாஹர்லால் நேருவும், டாக்டர் ராதாகிருஷ்ணனும் தில்லை நடராஜரைத் தரிசித்துவிட்டுத் திரும்புகின்றனர். 3. அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டை ஆரம்பித்து வைத்துப் பண்டித ஜவாஹர்லால் நேரு பேசுகிறார். 4. எழுத்தாளர் மகாநாட்டில் கூடியிருந்த மகா சபையின் ஒரு தோற்றம்.

ளர்களான இராஜ அரிய ரத்தினம், வைத்தி லிங்கம், சம்பந்தம், இலங்கையோர் கோன் ஆகிய வர்களின் சிறு கதைகளின் சிறப்பைக் கூறினர்,

தமிழ்ப் பத்திரிகைகளில் வந்த கதைகளில் "கொண்டிக் குருவி", "ஜல சமாதி", "கடலும் கரையும்", "தம்பியும் தமையனும்", "அன்ன பூரணி", "அவன் ஆண் மகன்", "அடுத்த வீடு" "கனிவு" முதலிய கதைகள் நல்ல முறையில் அமைந்துள்ளன என்று எடுத்துக் காட்டினர். "காணுமலே காதல்" "விஷ மந்திரம்" "கடிகாரச் சங்கிலி", "இதயச் சிறையில்", "முல்லைக் கொடியாள்", "வில் வண்டி" "வேதாந்த கேசரி", "பனித்திரை", "ஜீவ சிலை" முதலிய கதைகளைக் குறிப்பாக எடுத்துக் காட்டி, இவை வேறு பாஷைகளில் மொழி பெயர்த்துத் தமிழ்ச்சிறுகதையின் சிறப்பைப் பலர் அறிய எடுத்துக் காட்டுவதற்குத் தகுதி வாய்ந்தவை என்று அழுத்திச் சொன்னர். இப்படியாக அகில இந்திய எழுத்தாளர்கள் மத்தியில் தமிழ்க் கொடியை உயர்த்திப் பிடித்தார். ஏறக்குறைய எழுத்துத் துறையில் ஈடுபட்டுள்ள மிகப் பெரும் பாலோரைப் பற்றிக் குறிப்பிட்டுக் கூறிச் சிறு கதைகளின் வளர்ச்சியை நல்ல முறையில் எடுத்துக் காட்டிய அந்த விமரிசகர் யார் என்று தெரிந்து கொள்ள எல்லாரையும் போலவே நானும் ஆசைப் பட்டேன். அவர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் ஏ. சிதம்பரநாதன் செட்டியார் என்று அறிந்தேன். சர்வ கலாசாலைப் பேராசிரியராக இருந்து கொண்டு பல்வேறு தமிழ்ப் பத்திரிகைகளில் வரும் கதைகளை ஆராய்ச்சி ஆற்றலுடன் படித்துப் பாராட்டிய அவர் தமிழ்ப் பண்பையும் ரஸிக உள்ளத்தையும் எல்லாரும் பாராட்டினர்கள்.

அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டில் கலந்து கொண்ட எழுத்தாளர்களைப்பற்றி ஒரு வார்த்தை. இந்தியாவின் பல பாகங்களில் இருந்தும் எழுத்தாளர்கள் வந்திருந்தார்கள் அல்லவா! அவர்களில் மிகப் பலர் தலை நரைத்து உடல் தளர்ந்து உற்சாகம் குன்றி இருந்தார்கள். சிலரைக் கையைப் பிடித்தே அழைத்து வர வேண்டி யிருந்தது. ஆனல் தமிழ் நாட்டில் இருந்து வந்திருந்த எழுத்தாளர்கள் பெரும்பாலும் உற்சாகமாக இருந்தார்கள். இளம் எழுத்தாளர்கள் ஆர்வத் துடன் வந்து கலந்து கொண்டிருந்தார்கள். கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவவிடாமல் அவர்கள் அங்கேயே தமிழ் எழுத்தாளர் கூட்டம் ஒன்றையும் சிறப்பாக நடத்தினர்கள்.

தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் ஆசிரியர் "கல்கி" அவர்கள் தலைமையில் தமிழ் எழுத்தாளர் கூட்டம் அண்ணுமலை நகர் கோகலே மண்டபத்தில் நடந்தது. இந்தக் கூட்டத்துக்கு அண்ணுமலை நகர் மகாநாட்டுக்கு விஜயம் செய்திருந்த தமிழ் நாட்டு எழுத்தாளர்களில் மிகப் பெரும்பாலோர் வந்து கலந்து கொண்டனர். பேராசிரியர் அ. சீனிவாச ராகவன், ஸ்ரீ கே. ஆர். சீனிவாச ஐயங்கார், ஸ்ரீ வி. ஆர். மயிலேறு, டாக்டர் சிதம்பரநாதன் செட்டியார், ஸ்ரீ ஏ. ஜி. வேங்கடாச்சாரியார், ஸ்ரீ எம். ஆர். ஜம்புநாதன், "ஈழ கேசரி" ஆசிரியர் ஸ்ரீ ராஜ அரியரத்தினம், "பிரசண்ட விகடன்" ஆசிரியர் ஸ்ரீ நாரண துரைக்கண்ணன், யோகாசனம் ஸ்ரீ வி. என். குமாரசாமி, ஸ்ரீ பாஷ்யம் ஸ்ரீ பி. கோதண்டராமன், ஸ்ரீ ம. ப. பெரியசாமித் தூரன், ஸ்ரீ புத்தனேரி ரா. சுப்பிரமணியம், ஸ்ரீ ரா. பாலகிருஷ்ணன், ஸ்ரீ நா. ராமச்சந்திரன் முதலிய பல எழுத்தாளர்களும் ஏராளமான ரஸிகர்களும் வந்திருந்தார்கள்.

கூட்டத்துக்குத் தலைமைதாங்கிய ஆசிரியர் கல்கி அவர்கள் தமிழும் ஆங்கிலமும் பயின்று ஆங்கிலத்தில் நன்ருக எழுதும் ஆற்றல் படைத்த தமிழ் எழுத்தாளர்கள் தமிழ் இலக்கியத்துக்குச் செய்ய வேண்டிய சேவைகளைப் பற்றிக் குறிப்பிட்டார். பிறகு எழுத்தாளர்கள் எல்லாரையும் சபைக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டது.

பின்னர் தினமணி துணை ஆசிரியர் ஸ்ரீ ஏ. ஜி. வேங்கடாச்சாரியார் பேசினர். எழுத்தாளர்களின் சார்பில் இந்திய சர்க்காருக்குச் சில அருமையான யோசனைகளை எடுத்துக் கூறினர். அமெரிக்க சர்க்காரும், பிரிட்டிஷ் சர்க்காரும் இந்திய நாட்டு எழுத்தாளர்களைத் தங்கள் செலவிலேயே தங்களுடைய நாடுகளுக்கு அழைத்துச் சென்று அவர்கள் நாட்டுக்கும் நம் நாட்டுக்கும் சிநேகப் பான்மை வளருவதற்கான வழிகளைச் செய்கிருர்கள். அது போல இந்திய சர்க்கார் நம் நாட்டு எழுத்தாளர்கள் ஒரு மாகாணத்தில் இருந்து இன்னெரு மாகாணத்துக்குச் சென்று அங்குள்ள மக்களுடனும், அவர்கள் இலக்கியங்களுடனும் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வழி செய்யலாம். அதனல் ஒரு மாகாணத்து மக்கள் இன்னெரு மாகாணத்து மக்களைப் புரிந்து கொள்ள முடியும். இதற்கு எழுத்தாளர்களுக்குச் சர்க்கார் சில வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். ரயிலில் குறைந்த செலவில் பிரயாணம் செய்வதற்கும் வேறு மாகாணங்களில் அவர்கள் தங்கி இலக்கியத் தொண்டு ஆற்றுவதற்கும் வேண்டிய எல்லா சௌகரியங்களைச் செய்து கொடுக்கலாம் என்று கூறினர்.

பி. இ. என். காரியதரிசி ஸ்ரீ எம். ஆர். ஜம்புநாதன் பேசும் போது தமிழ் எழுத்தாளர் சங்கம், தமிழ் நாட்டுப் பேனு கிளைச் சங்கமாகத் திகழ வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். கடைசியாகப் பேசிய பேராசிரியர் அ. சீனிவாச ராகவன் ஒரு நூதனமான சம்பவத்தை உணர்ச்சிப் பெருக்குடன் குறிப்பிட்டார்.

சில ஆண்டுகளுக்கு முன் அவர் சில தமிழ் அன்பர்களுடன் இருக்கும் போது அவர்களுடன் ஒரு வங்காளியும் இருந்தாராம். அந்த


பேராசிரியர் டாக்டர் சிதம்பரநாதன் செட்டியாரும், பேனு சங்கக் காரியதரிசி ஸ்ரீ எம். ஆர். ஜம்புநாதனும்.

வங்காளி, "உங்கள் நாட்டில் தாகூரைப் போல் யாராவது கவிஞர் இருக்கிறாரா!" என்று கேட்டாராம். அப்போது தாகூர் உயிருடன் இருந்த காலம். அவருடன் இருந்த எல்லாத் தமிழ் அன்பர்களும் "இல்லை" என்று சொல்லி விட்டார்களாம். ஸ்ரீ சீனிவாச ராகவன் அதை உடனே மறுத்து, "இருக்கிறார்; எங்களுக்குக் கம்பன் இருக்கிறார்" என்றாராம். மற்றத் தமிழ் அன்பர்கள் மூலம் கம்பரைப் பற்றித் தெரிந்து கொண்ட வங்காளி "ஆயிரம் வருஷத்துக்கு முன்னால் இறந்துபோன கம்பரைப் பற்றி யார் கேட்டார்கள்? இப்போது உயிருடனிருக்கும் கவியைப் பற்றி அல்லவா கேட்டேன்!" என்றாராம்.

அதற்கு ஸ்ரீ சீனிவாச ராகவன், "வங்காளத்தில் எப்படியோ தெரியாது. எங்கள் தமிழ் நாட்டில் கவிஞர்கள் இறப்பதில்லை. எப்போதும் அமரர்களாக இருந்து வருவார்கள்!" என்று கூறி அந்த வங்காளியைத் திகைக்கச் செய்தாராம்.



அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டுக்கு வந்திருந்த தமிழ் எழுத்தாளர்களில் சிலர்.

தமிழ்க் கவியின் சிறப்பை இவ்வளவு உயர்ந்த முறையில் எடுத்துக் காட்டிய பேராசிரியர் அ. சீனிவாச ராகவன் அவர்களின் சொற்பொழிவைக் கேட்டுச் சபையோர் உற்சாகக் கரகோஷம் செய்தார்கள். இந்த மாதிரி உற்சாகத்தை மூன்று தினங்கள் நடந்த அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டில் காண முடியவில்லை.

மூன்றும் நாள், பதினெட்டாம் தேதி காலையில் சாஸ்திரியார் மண்டபத்தில் ஸ்ரீமதி ஸோபியா வாடியா தலைமையில் கூட்டம் ஆரம்பமாகியது. சுதந்திர இந்தியாவில் ஆங்கிலத்தின் நிலைமை எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றி ஆராய்ச்சிக் கூட்டம் நடந்தது. டாக்டர் ஸி. பி. ராமசாமி ஐயர் இந்தக் கூட்டத்தை ஆரம்பித்து வைத்தார். வழக்கம் போலவே எல்லா மொழியைச் சேர்ந்தவர்களும் இதில் பங்கெடுத்துக் கொண்டார்கள். முதல் மொழியாக அந்தந்தப் பிரதேசத்துக்குரிய தாய்மொழியும் இரண்டாவதாக இந்தியாவின் பொது மொழியான இந்தியும் மூன்றாவதாக உலகமெங்கும் பரவியுள்ள ஆங்கிலமும் இருக்க வேண்டும் என்ற அபிப்பிராயத்தை எல்லாரும் வலியுறுத்தித் தெரிவித்தனர். ஆங்கிலத்தை அடியோடு நிராகரித்து விடவேண்டும் என்ற யோசனையை யாரும் ஆதரிக்கவில்லை.

தொடர்ந்து 1949-ம் ஆண்டிலிருந்து 1953-ம் ஆண்டு வரை ஐந்து ஆண்டுகளில் இலக்கியங்கள் வளர்ந்த முறையைப் பற்றிய ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள் நடந்தன. தமிழ் இலக்கியம் வளர்ந்துள்ள முறைகளைப் பற்றி ஸ்ரீ லெ. சந்திரசேகரன் கனிர் என்று சுவையுடன் பேசியதைக் குறிப்பிட வேண்டும். ஐந்து வருஷங்களில் தமிழ் இலக்கியம் வளர்ந்த முறையைப் பற்றியும் அதை வளர்ப்பதற்குப் பாடுபட்ட ஆசிரியர்களைப் பற்றியும் குறிப்பிட்டார். எல்லா எழுத்தாளர்களைப் பற்றியும் பொதுவாகச் சொல்லி, சிறப்பாகச் சில எழுத்தாளர்களின் சேவையையும் எடுத்துக் காட்டினார். கவிமணி ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளையைப் பற்றி அவர் முடிவாகக் கூறியது கவிதா சங்கதம் பொருந்தியதாக இருந்தது.

பின்னர் பேசிய ஸ்ரீ ஏ. ஜி. வேங்கடாச்சாரியார் "கூறியது கூறல்" என்ற குற்றத்துக்கு ஆளாகக் கூடாது என்பதற்காகத் தாம் எழுதி எடுத்து வந்திருந்த நீண்ட உரையில் கவியரசர் பாரதியாரைப் பற்றிய பகுதியை மட்டும் விஸ்தாரமாகப் படித்து முடித்தார்.

பிற்பகலில் நடந்த மகாநாட்டின் இறுதிக் கூட்டத்தில் ஸ்ரீ ஏ. ஜி. வேங்கடாச்சாரியார் எழுத்தாளர்கள் நடத்தும் இந்த மாதிரி ஆராய்ச்சிக் கூட்டங்களுக்குச் சிறந்த முறையில் ஒரு யோசனை கூறினார். தாங்கள் பேசப் போகும் விஷயங்களை முதலிலேயே அச்சடித்து எல்லாப் பிரதிநிதிகளுக்கும் வழங்கிவிட வேண்டும். பிரதிநிதிகள் அந்த ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படித்து விட்டு வந்து அதன்மீது ஆராய்ச்சி நிறைந்த விவாதங்கள் நடத்தினால் மிகப்பொருத்தமாக இருக்கும் என்றார்.

அகில இந்திய எழுத்தாளர்கள் மகாநாடு கூடி ஏதோ பிரமாதமாகச் சாதித்து விட்டார்கள் என்று சொல்ல முடியா விட்டாலும், போகப் போக இதுபோன்ற மகாநாடுகளால் எழுத்தாளர்களுக்கும் நாட்டுக்கும் நல்ல பலன் ஏற்படும் என்று நிச்சயமாக நம்பலாம்.

** ** **

அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டின் வெற்றியைப் பற்றிச் சொல்லும்போது அதற்காகப் பாடுபட்ட வரவேற்புக் குழுவினரின் தொண்டைப்பற்றிக் குறிப்பிட வேண்டும்.

வரவேற்புக் குழுவின் தலைவராக இருந்து, சகல ஏற்பாடுகளுக்கும் பொறுப்பு வகித்து, கூடியவரையில் ஒவ்வொரு விருந்ினரையும் தனித்தனியே பார்த்து உபசரித்த டாக்டர் ஸி. பி. ராமசாமி ஐயர் அவர்களின் சேவை மகத்தானது. இந்தியப் பிரதமர் நேருவுடன் எதிர்பாராமல் இன்னும் பல பிரமுகர்களும் விஜயம் செய்து விட்டார்கள். பந்தோபஸ்துக்காக சுமார் ஆயிரத்தைந்நூறு

போலீஸாரும் வந்திருந்தார்கள். இவ்வளவு பேரையும் சமாளிப்பது இலேசான காரியமா ?

அமெரிக்கா போன்ற மிகப் பெரிய நாட்டில் குடியரசுத் தலைவராக இருந்து நாட்டை ஆண்டவர்கள் தங்கள் ஓய்வு காலத்தில் சர்வ கலாசாலை தலைவர்களாக இருந்து நாட்டின் எதிர்கால மக்கள் நல்ல முறையில் வளரும் பணியில் ஈடுபட்டு உழைப்பார்களாம். அது போல மிகச் சிறந்த பதவிகளை வகித்து வந்த டாக்டர் ஸி. பி. ராமசாமி ஐயர் அவர்கள் அண்ணாமலை சர்வகலாசாலை உப அத்யட்சகராக இருந்து பணியாற்றி வருவதால் அண்ணாமலை சர்வகலாசாலையின் அந்தஸ்தே உயர்ந்து விட்டது. அவருடைய உதவியினால் நடந்த அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டின் சிறப்பும் உயர்ந்து விட்டது.

மகாநாட்டின் வெற்றிக்கு இன்னும் பலர் பாடுபட்டனர். அண்ணாமலை சர்வகலாசாலைப் பேராசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். மயிலேறு, ஸ்ரீ ராமநாதம் பிள்ளை, ஸ்ரீ சீனிவாசாச்சாரியார், பம்பாயிலிருந்து வந்திருந்த பேனா சங்கக்காரியதரிசி ஸ்ரீ எம். ஆர். ஜம்புநாதன், முன்னாள் சென்னை மேயர் ஸ்ரீ ராமசாமி நாயுடு முதலியவர்கள் பெரிதும் சிரமப்பட்டு உழைத்து மகாநாடு சிறப்பாக நடப்பதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் மிகத் திறமையாகச் செய்திருந்தார்கள்.

மகாநாட்டுக்குப் பலப் பல மாகாணங்களில் இருந்து வந்திருந்த பிரதிநிதிகள் அண்ணாமலை நகரில் உள்ள பல்வேறு கட்டிடங்களில் தங்கியிருக்க நேர்ந்தது. அவர்களுக்குப் பல வகைகளில் உதவி புரிந்த அண்ணாமலைச் சர்வ கலாசாலை தொண்டர்களுக்கு நன்றி கூறுகிறேன்.

16ஆ இரவு புதுக்கோட்டை ஸ்ரீ கே. நாகராஜன் ஆங்கிலத்தில் எழுதிய "நந்தன்" என்னும் நாடகம் அண்ணாமலைச் சர்வகலாசாலையைச் சேர்ந்த ஆசிரியர்-மாணவர் குழுவினரால் நடிக்கப்பட்டது. நாடக ஆரம்பத்தில் "மாலைப்பொழுதினிலே" என்ற பாடலுக்கு ஒரு சின்னஞ்சிறு பெண் குழந்தை அபிநயம் பிடித்துச் சபையோரை மகிழ்வித்தாள். குழந்தையின் அபிநயத்தை வியந்து மகிழ்ந்த சபையோரைப் போலவே பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவும் பெரிதும் ரஸித்து மகிழ்ந்தார். ஸ்ரீ நடராஜப் பெருமானின் ஆனந்தத் தாண்டவத்தை அற்புதமாக ஆடிக் காட்டிய பெண்மணியின் நடனத் திறமை வெகுவாகப் பாராட்டப்பட்டது.

17ஆ ஸ்ரீமதி ருக்மணி தேவி தமது குழுவினருடன் "குமார சம்பவம்" என்ற நாட்டிய நாடகத்தை நடத்தி மகாநாட்டுப் பிரதிநிதிகளை மகிழ்வித்தார். இந்த அருமையான நாட்டிய நாடகத்தை ஸ்ரீ ஜவாஹர்லால், டாக்டர் ராதாகிருஷ்ணன் முதலியவர்கள் பார்த்து ரஸித்தனர்.

தமிழ் நாட்டில் அகில இந்திய எழுத்தாளர் மகாநாட்டை நடத்தப் பிரயத்தனம் எடுத்துக் கொண்டு பாடுபட்டவர்களுக்கும், அதை வெற்றிகரமாக நடத்திக் கொடுத்தவர்களுக்கும் எழுத்தாளர்கள் சார்பாக நன்றி கூறுகிறேன்.

---

## வீண் பிடிவாதம்




கான் அப்துல் கபார்கான் பாகிஸ்தான் சர்க்காரை நல்ல வழியில் திருப்ப எவ்வளவோ முயன்றும், உண்மையைப் பார்க்க மாட்டோம், கேட்க மாட்டோம், பேச மாட்டோம் என்ற கதையாகப் பாகிஸ்தான் சர்க்கார் தலைவர்கள் பிடிவாதம் செய்து வருகிறார்கள்.

# வட்ட மேஜை

## யோகியின் தீர்க்கதரிசனம்

மகான்களின் வாக்குகள் தீர்க்க தரிசனமடைகின்றன. சுப்பிரமணிய பாரதியின் பாடல்கள் தீர்க்க தரிசனம் அடைந்து விட்டன. அதேபோல ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின் பாடல்களும் தீர்க்க தரிசனம் அடைந்து வருகின்றன.

ஸ்ரீ யோகியாரவர்கள் "பொன்னிலங்கை வாழ்கவே" என்று ஓர் பாடல் பாடினர். இலங்கையின் வளம் மிக்க வனப்பையும், பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்து காணப்படும் பசுமையின் தன்மையையும், அன்னர் இலங்கையில் தங்கி இருக்கும்போது நன்கு அனுபவித்தார். இத்தகைய வளம் மிக்க நாட்டில், பண்பு, வீரம், உறுதி முதலாய அரிய குணங்கள் பொலிவதையும் கண்டார். அந்த உணர்ச்சி வேகத்தில் உதித்த பாடல்தான் "பொன் இலங்கை வாழ்கவே!" என்னும் அரிய பாடல்.

எங்கள்பொன் இலங்கை வாழ்கவே—காலை
இரவிபோல அழகு பொலிகவே!
மங்களச் சுதந்திரக் கதிர்—வீசி
மடமை யடிமை யச்ச மொழிகவே.

அன்புறுதி யுண்மை வீரமும்—காட்டும்
ஆண்மைச் சிங்கம் இலகு முந்நிறம்
நன்பு மிக்க லங்கையின் கொடி—அதை
ஞால மெல்லாம் புகழ நாட்டுவோம்.

தென்கடலின் மார்பகத்திலே—பூத்த
செழுந்திருக் கமலம் போன்றதே
பொங்கு புத்த சைவ நன்மணம்—வீசிப்
பொலிக நல்ல யோக நாடிதே!

யோகியாரின் பாடல் தீர்க்கதரிசனம் உடையது என்பதை உலகுக்கு எடுத்துக் காட்டுவதற்குத்தான் போலும் ஸ்ரீ நவரத்தினசாமி தம் செயற்கரிய சாதனையைச் செய்தார். கடல் நீந்துவது என்றால் சாமானியமான காரியமாகாது. அதுவும் மலைபோல் அலைகளுள்ள ஒழுங்கை உறுமும் புயற் கடலை நீந்திக் கோடிக் கரையை அடைவது முடியாத காரியம். கோடிக் கரைக் கடலின் கொடுங் கொந்தளிப்பையும், கோடிக்கரைச் சேற்றின் கொடூரத்தையும் "பொன்னியின் செல்வன்" என்னும் சரித்திர நவீனத்தைப் படித்து வரும் நேயர்கள் அறியாமல் இருக்க மாட்டார்கள்.

இன்று யோகியாரின் கவிதையில் தீர்க்கதரிசனம் உண்டு என்பதை ஞாலம் உணரவைத்து விட்டார், உறுதியும் பழந்தமிழ் வீரமும் ஒருங்கே அமைந்த ஸ்ரீ மு. நவரத்தினசாமி அவர்கள்.

வீரர்கள் தோன்றினால்தான் புலமை தோன்றும் என்பது ஒரு பெரிய உண்மை.

ஸ்ரீ நவரத்தினசாமியின் பழந்தமிழ் வீரத்துக்கு நிகரான வீரத்தைப் புகழ்ந்து எழுதிய பாடல்கள் எண்ணிறந்தன. இவைகள் எல்லாவற்றையும் தொகுத்து வெளியிட்டால் புறநானூற்றில், வீரரைப் புகழ்ந்து எழுதிய கவிதைகள் எவ்வாறு பண்டைத் தமிழ் மக்கள் வீரம் புரிந்தார்கள் என்பதை எமக்கு எடுத்துக் காட்டுகின்றனவோ, அவ்வாறே நமது வருங்கால மக்களுக்கும் இவ் வீரச் செயலை எடுத்துக் காட்டுவதற்கு ஓர் உகந்த நூலாக விளங்குமெனின் மிகையாகாது.

இலங்கை
21-4-54

பகவான்

●

## வேர் அறுக்க வேண்டும்!

ஆரம்ப ஆசிரியர்களாகிய எங்களுக்குச் சர்க்கார் மூன்று ரூபாய் சம்பளம் உயர்வு அளித்ததை முழு மனத்துடன் வரவேற்றுப் பாராட்டுகிறேன்.

---

ஏப்ரல் மாதம் நாலாந் தேதி ஞாயிறு மாலை 5-30 மணிக்கு மயிலை "ரத்ன மஹால்"லில் மயிலாப்பூர் ஸ்ரீ செந்தாமரை வித்தியாலயக் கட்டிட நிதிக்கான கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன.

ஸ்ரீமதி சூலமங்கலம் சகோதரிகளின் இசை நிகழ்ச்சி ஸ்ரீ லால் சந்த் தாதா அவர்கள் முன்னிலையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. ஏராளமான ஜனங்கள் இந்த விழாவில் கலந்து கொண்டனர்.

பொன்வயல் புகழ் குமாரி சுசீலாவின் நடன நிகழ்ச்சி, ஸ்ரீ டி. கோவிந்தராஜுலு நாயுடு அவர்கள் முன்னிலையில் நடந்தது. இந்த விழாவுக்கு ட்ரோஜன் அண்ணாமலை செட்டியார் அவர்கள் தலைமை தாங்கினர்கள்.

வித்தியாலய மானேஜர் ஸ்ரீ பி. டி. ஸ்ரீனிவாசன் நிதிக்கு உதவியவர்களுக்கு நன்றி கூறினர்.

இறுதியில் பள்ளியின் துணைத் தலைவர் ஸ்ரீ கே. கமலக் கண்ணன் எம். ஸி. அவர்கள் தனவந்தர்கள் யாவரும் கட்டிட நிதிக்குப் பொருள் உதவி செய்தல் வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, நன்றி கூற விழா இனிது முடிவுற்றது.



---

சர்க்கார், ஆசிரியர்களுக்கு மூன்று ரூபாய் கொடுக்கும்படி மானேஜ்மெண்டார்களுக்கு உத்தரவிட்டும் அவர்கள் கொடுக்கா விட்டாலும் பாதகமில்லை, எங்களிடம் மேற்கொண்டு பணம் பிடுங்காமல் விட்டால் போதும் என்றாகி விட்டது. பள்ளிக்கூட மானேஜர்கள் மூன்று ரூபாய் கொடாததோடு மாதா மாதம் எங்கள் சம்பளத்தி லிருந்தும் மூன்று ரூபாய் முதல் பத்து ரூபாய் வரை கமிஷன் எடுத்துக் கொண்டு விடுகிறார்கள். அப்படிக் கொடுக்க மறுக்கும் ஆசிரியர்கள் எத்தனை திறமை உள்ளவர்களா யிருந்தாலும் வேலையிலிருந்து நீக்கப் படுகிறார்கள். மானேஜர் சொல்வதையே கல்வி அதிகாரிகள் அங்கீகரிக்கிறார்கள். வேலை போய்விடும் என்று அஞ்சும் நாங்கள் கல்வி அதிகாரிகளிடம் இதை அறிவிக்கப் பயந்து கொண்டிருக்கிறோம். இப்போது கொடுக்கும் மூன்று ரூபாய் அதிகச் சம்பளத்தையும் மானேஜர்கள் கேட்கிறார்கள். இந்த அக்கிரமக் கொடுமையினின்றும் சுதந்திர சர்க்கார் எங்களைக் காப்பாற்ற உடனடியாக முன் வர வேண்டும். இராஜபாளையம், ஸ்ரீவில்லிபுத்தூர், தென்காசி வட்டாரங்களில் கல்வி அதிகாரிகள் மானேஜர்களையும் ஆசிரியர்களையும் நேரில் விசாரித்து இந்த லஞ்சத் தாண்டவத்தை வேரறுக்க வேண்டும். குற்றம் சாட்ட நெஞ்சுறுதி இல்லாத வாயில்லாப்பூச்சிகளாகிய ஆரம்ப ஆசிரியர்களுக்குச் சர்க்கார் எத்தனை சம்பளம் உயர்த்தினாலும் அது பள்ளி மானேஜருக்கே போய் விடுகிறது. எங்கள் கைக்குக் கிடைக்கச் சர்க்கார் ஆவன செய்ய வேண்டும்.

தென்காசி
20—4—54

கே. வேல்முருகன்

●

## தகுதியில்லாதவர்களா?

பாரத நாட்டிலே பரம்பரையாக மதிப்புப் பெற்று, மாதா பிதாவுக்கு அடுத்தபடியாகவும், தெய்வத்துக்கு முன்பாகவும் வைத்து மதிப்பிடப் பட்டு வந்த ஆசிரியர்களின் தற்கால அல்லலைப் பற்றி எங்ஙனம் வரைவதென்றே தெரியவில்லை!

எந்தக் காலத்தில் அதிகச் சம்பளம் வாங்கி இப்பொழுது வாங்காமல் இருக்கிறோம், எந்தக் காலத்தில் அதிக சம்பளம் வாங்கப் போகிறோம்! இரண்டு மில்லை. இப்படி இருக்க எங்கள் சம்பள உயர்வையும் மதிப்பையும் பற்றி வராத பத்திரிகையே கிடையாது; பேசாத கூட்டமில்லை; பேசாத நபர் இல்லை.

ஆனால் நாங்கள் கூக்குரலிடவும் இல்லை. வேலையையும் விடவில்லை; கொட்டியு மளக்கவில்லை. இவ்வளவு நிதானமாக இருக்கும் கட்டத்திலே எங்களுக்கு ஐம்பது ரூபாய் சம்பளமே அதிகமென்றும் அதை வாங்கக் கூடத் தகுதி யற்றவர்கள் என்றும் அறிவாளி எனக் கூறப்படும் ஒருவர் சொல்வது தர்மமாகுமா! இப்படி கூறக் கூடியவர் ஆசானைக் காணுமலேயே கற்றுப் பதவிக்கு வந்து விட்டாரா! தகுதி யில்லாத



சங்கீத வித்வான் மாயவரம் ஸ்ரீ வி. வி. கிருஷ்ணய்யர் அவர்களின் செல்வக் குமாரி சௌ. புஷ்கலாம்பாளுக்கும், ஸ்ரீ பி. எஸ். சங்கரய்யர் அவர்களின் குமாரனும், ஸ்ரீ எஸ். விஸ்வநாதன் (W. லாக்சண்ட்ஸ், கொழும்பு) அவர்களின் சகோதரனுமான சிரஞ்சீவி சுந்தரேசனுக்கும் (The Chartered Bank of India) சென்ற 21-4-54 சென்னையில் மிகச் சிறப்பாக விவாகம் நடந்தேறியது. முகூர்த்தத்துக்கும், அன்று மாலை நடந்த ஸ்ரீமதிகள் பிருந்தா, முக்தா அவர்களின் கச்சேரிக்கும் பல பிரமுகர்களும், பிரபல சங்கீத வித்வான்களும் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர்.

எங்கள் எல்லோரையுமேயே வழி அனுப்பி விட்டு ஒருமாத காலமாவது பள்ளிகளை நடத்திக் காட்டலாமே! அல்லது மற்றவர்களுக்கு எங்கள் தொழிலை ஒப்படைத்துப் பார்க்கட்டுமே!

கோயமுத்தூர்
20—4—54

வி. சீதாதேவி

●

## ஏமாற்றப்பட்டேன்!

எனக்கு வயது பதினெட்டு ஆகிறது. நான் எஸ். எஸ். எல். ஸி. தேர்ச்சி பெற்று இரண்டு வருடங்கள் ஆகிறது. என்னுடைய குடும்பம் ஏழ்மையானதால், என்னுடைய பெற்றோர்களால் என்னை மேற்கொண்டு படிக்க வைக்க இயலவில்லை. ஆகவே, என் குடும்பம் முன்னுக்கு வர நான் வேலை தேடும் படலத்தில் இறங்க வேண்டிய தாயிற்று.

சென்ற மாதத்தில் ஒரு பிரபல பத்திரிகையில் ஒரு கம்பெனிக்கு "விற்பனைப் பிரதிநிதிகள் தேவை" என்று விளம்பரம் வந்திருந்தது. அதில் மாத சம்பளம் ரூ. 75 நிலையாகக் கொடுக்கப்படும் என்று கண்டிருந்தது. நான் இரண்டு வருடங்களாகப் பலவித வேலைகளுக்கும் பிரயத்தனப்பட்டு அம் முயற்சியில் தோல்வி அடைந்தவன். ஆதலால் இந்த விளம்பரத்தைக் கண்டு உடனே ஒரு மனுப்போட்டேன். போட்ட சில நாட்களில் நான் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டதாகவும், இந்த வேலைக்கு முன் பணமாக ரூ. 70 கட்ட வேண்டும் என்றும், இஷ்டமிருந்தால் நேராகச் சென்னைக்கு வந்து இரண்டு நாட்களில் பேட்டி காண வேண்டும் என்றும் கண்டிருந்தது. வேலை கிடைத்தால் போதும் என்று நினைத்து அந்த முன் பணம் ரூ. 70ஐ உடனே மிகச் சிரமப்பட்டுக் கடன் வாங்கிக் கொண்டு சென்னைக்குப் பயணமானேன். அந்த விலாசத்தில் கண்டிருந்த அந்தக் கம்பெனியின் மானேஜர் இருக்குமிடத்தைத் தேடிக் கண்டு பிடித்தேன். அவரைச் சந்தித்தி

விருந்து அக் கம்பெனியின் தலைமைக் காரியாலயம் கல்கத்தாவிலிருக்கிறது என்று தெரிய வந்தது. மேலும், எனக்கு ரூ. 75 சம்பளம் கொடுக்கப்படும் என்றும், இன்னும் சில வார்த்தைகளைச் சொல்லி என்னை அவர் உற்சாக மூட்டினார். "நீ பணத்தைக் கட்டத் தயாரா?" என்று கேட்டு என்னிடமிருந்து பணத்தை வாங்கிக் கொண்டு, எனக்கு ஒரு ரசீதைக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தார். எனக்கு இன்னும் ஒரு வாரத்தில் என்னுடைய ஊருக்கு வேலைக்காக "அதிகார பூர்வமான" உத்தரவு வரும் என்றும், அது வந்தவுடன் வேலையில் சேர்ந்து விடலாம் என்றும் சொன்னார். மேலும் வேலை வேண்டிய தில்லை என்று நான் விரும்பினும் அந்த முன் பணம் திருப்பிக் கொடுக்கப்படும் என்று சொன்னார்.

நான் ஊருக்குத் திரும்பி வந்தேன். வந்தபின் ஒரு வாரத்துக்குப் பின் ஒரு உத்தரவும், அதோடு ஒரு "நிபந்தனை பாரமும்" வந்தது. அதில் நான் வேலைக்கு ஒரு இடத்துக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டு விட்டதாகவும், நான் ரூ. 2000-க்குச் சாமான் விற்றால் தான் ரூ. 75 கமிஷன் தரப்படும் என்றும் (சம்பளம் அல்ல) கண்டிருந்தது. மேலும் சில செய்ய முடியாத நிபந்தனைகளும் அதில் எழுதப்பட்டிருந்தது. இதைக் கண்ட என் பெற்றோர் நான்செய்த காரியத்துக்கு மனம்வருந்தி, என்னைக் கட்டிய பணத்தைத் திரும்பிப் பெற்று வரும்படி இரண்டாம் முறையாகச் சென்னைக்கு அனுப்பினார்கள். நான் அவரைச் சந்தித்தேன். வேலை வேண்டாத பட்சத்தில் பணம் இன்னும் சில நாட்களில் கல்கத்தாவி லிருந்து அனுப்பப்படும் என்றும், என்னை ஊருக்குத் திரும்பிப் போய் விடும்படியும் சொன்னார். ஆனால் ஒரு வாரத்தில் கல்கத்தாவிலிருந்து சில விதிகளின் படி பணம் திருப்பி அனுப்பப்பட மாட்டாது என்று ஒரு கடிதம் வந்தது. அது முதல், என்ன செய்வதென்றே எனக்குப் புரியவில்லை. ஒரே குழப்பமா யிருக்கிறது. வாங்கிய கடனை எப்படி அடைப்பது என்று திண்டாடிக் கொண்டு இருக்கிறோம். இனி எனக்கு வேலை என்று அகப்படுமோ! இன்னும் என்ன அல்லல்கள் சேருமோ!

மதுராந்தகம்
22—4—54

டி. டி. வரதராஜன்

## புதுவைப் போர்ப்படைக்கு வாழ்த்து!

தமிழழகன்

வெள்ளையர் ஆதிக்கந்தன்னை ஒழிக்க
வெகுண்டெ எழுந்தோரே,—எம(து)
உள்ளம் குளிர உமைவாழ்த்தி வணங்கிறோம்,
உண்மைதான் வெல்க என்றே!

பாரதத் தாய்த்திரு வீரர்தம் முன்அவர்
பட்டயம் நிலைத்திடுமோ?—நாட்டுப்
போரெனில் தோள்கள் புடைத்தெழும் பரம்பரைப்
போர்வீரர் நாமலவோ?

புதுவையும் காரையும் வேறவர்க் காட்படப்
பொறுமையோ டிருப்பதுவோ?—வெறும்
பதுமையாய் இருக்க நாம் பாமரர் அல்லவே
பலகளம் கண்டவர் நாம்!

எங்கேயோ பிரான்சில் இருப்பவர் நம்மோரை
இன்னமும் ஆளுவதாம்!—அதை
அங்ஙனே ஏற்றுக்கொண்(டு) ஆட்படல் நாமெனில்
அவமானம் நமக்கல்லவோ!

வாளாயிருந்தது போதும்; இனிவேனும்
தாளாது போர்க்கெழுவீர்!—பல
நாளாய்ச் சுரண்டிநம் நாட்டைக் கெடுத்தோரை
நாவாயில் ஏற்றிடுவீர்!

## சோதிடக் கடிதங்களுக்குப் பரிசு

சோதிட சாஸ்திரத்தைப் பற்றியும், சோதிடம் பார்ப்பதில் உள்ள அநுபவங்கள் பிரதிகூலங்கள் பற்றியும் நேயர்களிடமிருந்து நாம் எதிர்பார்த்ததைவிட ஏராளமான கடிதங்கள் வந்தன. இவ்வளவு உற்சாகமாக இந்தப் போட்டியில் கலந்து கொண்ட எண்ணற்ற நேயர்களுக்கு நமது மனமார்ந்த நன்றி. மேற்படி கடிதங்களில் பிரசுரத்துக்குப் பொறுக்கி எடுத்தவற்றை எல்லாம் ஜனவரி 31௳ முதல் ஏப்ரல் 25௳ முடிய எழு கல்கி இதழ்களில் வெளியிட்டு விட்டோம். நாலு கடிதங்களுக்குத்தான் பரிசு கொடுப்பதாக அறிவிக்கப்பட்டிருந்த போதிலும் ஆறு கடிதங்களுக்குப் பரிசுகள் வழங்கப் பட்டிருக்கின்றன. பரிசு பெற்றவர்களின் விவரம் பின்வருமாறு:

1. ஜெகதாபி ரகுபதி ரங்கராஜு
ஜகன்னாதபாக், சென்னை-25

2. ஏ. டி. என். இராமசாமி
கவரைப்பாளையம், ஆண்டிமடம் போஸ்ட்

3. ஆர். வனஜா லட்சுமி
25-ஏ, தேவர் தெரு, வில்லிவாக்கம்
செங்கற்பட்டு ஜில்லா

4. எல். கிருஷ்ணசாமி
28, சீனிவாச ஆச்சாரித் தெரு, பெரம்பூர்

5. சுப. இராமன்
வீராசாமி காலனி, கீழ ராஜ வீதி, தஞ்சை

6. சு. அரிஹரன்
மேலத் தெரு, கொட்டாரம்
நாகர்கோவில் வழி

# காற்றிலே...!




**க**ண்ணுக்கெட்டிய தூரம் வரை நீலக்கடல் பரவி யிருந்தது. அதிலிருந்து எழும்பிய அலை ஓசை 'சோ' வெனக் காதைப் பிளந்து கொண்டிருந்தது. அன்று கடற்கரை ஒரே பேரிரைச்சலுடன் காணப்பட்டதின் முக்கிய காரணம் கல்லூரி மாணவ மாணவிகளின் பரீக்ஷைகள் எல்லாம் முடிவுற்றதுதான். ஒரு தனியான இடத்தில் இரு நண்பர்கள் உட்கார்ந்து கொண்டு அளவளாவிக் கொண்டிருந்தனர்.

"என்ன, சங்கர் உன்னுடைய கடைசி வருட வைத்தியப் படிப்பு முடிந்து விட்டது. பரீக்ஷை முடிவு தெரிந்தவுடன் எந்த ஊரில் போய்த் தொழில் செய்யப் போகிறாய்?" என்றான் ராமு.

"பரீக்ஷை முடிவு முதலில் வெளியாகட்டும். பிறகுதான் அதைப் பற்றி யோசிக்க வேண்டும்" என்றான் சங்கரன் சற்று அசிரத்தையாக.

"என்னப்பா, நீ கூடவா முடிவைப் பற்றிக் கவலைப் படுகிறாய்? மாகாணத்திலே முதன்மையாகத் தேறக் கூடியவன் என்று எல்லோரும் உன்னைப் பற்றிச் சொல்லுகிறார்கள். நீ ஏன் கவலைப்படுகிறாய்?" என்று ஏளனம் செய்தான் ராமு.

"ராமு, நான் நிச்சயம் பரீக்ஷையில் தேறி விடுவேன். அதற்காக நான் கவலைப்படவில்லை. பரீக்ஷையின் முடிவுக்குப் பிறகு தான்......" என்று இழுத்தான் சங்கரன்.

"என்? ஒரு நல்ல பெண்ணைப் பார்க்கிறது. கலியாணம் செய்து கொள்வது. பிறகு உன் தொழிலை ஆரம்பிப்பது. இதில் என்னப்பா ஆழ்ந்த யோசனை வேண்டிக் கிடக்கிறது?" என்றான் ராமு.

"ராமு, நீ என்னை இன்னும் புரிந்து கொள்ளவில்லை. நான் எல்லோரையும் போல் கலியாணம் என்னும் பந்தத்தில் மாட்டிக் கொண்டு அவதிப்படப் போவதில்லை. வாழ் நாள் எல்லாம் பிரம்மச்சாரியாகவே காலம் கழிக்கப் போகிறேன். என் வாழ்நாளெல்லாம் தொண்டு செய்வதிலே கழிக்கப் போகிறேன். கலியாணம் என்ற பந்தத்தில் மாட்டிக் கொண்டால் நான் நினைப்பதெல்லாம் நடக்காது. ஆகையால் நிச்சயமாகக் கலியாணம் செய்து கொள்ளவே மாட்டேன்" என்று ஒரு குட்டிப் பிரசங்கமே செய்து முடித்தான் அவன் நண்பன் சங்கரன்.

இதைக் கேட்டவுடன் 'இடி இடி' என்று சிரித்தான் ராமு. அவனால் அப்பொழுது பொங்கிவந்த சிரிப்பை அடக்க முடியவில்லை.

"என்னப்பா, ஏன் சிரிக்கிறாய்?" என்று ஆச்சரியத்துடன் வினவினான் சங்கரன்.

"இந்தமாதிரி சொல்லியவர்கள் எல்லாம் கலியாணம் செய்து கொண்டு மனைவி தாஸனாக மாறி விடுகின்றார்கள். உன்னைப்போல் நான் நூறு பேரைப் பார்த்து விட்டேன்" என்று சொல்லி மேலும் நகைத்தான் ராமு.

"என்னையும் அவர்களில் ஒருவனாக்கி விடாதே. நான் காரியத்தில் செய்து காட்டுகிறேன். பிறகு சொல். அது சரி உன் பி. எஸ்ஸி. இந்த வருஷத்தோடு முடிந்து விட்டதுபோல் இருக்கே. நீ மேலே என்ன செய்யப் போகிறாய்?" என்றான் சங்கரன்.

"நானா? என் நண்பன் மூர்த்தியின் தங்கை விமலா என்று ஒருத்தி இருக்கிறாள். அவளை நான் நேசிக்கிறேன். அவளும் என்னை நேசிக்கிறாள். பரீக்ஷை முடிவு தெரிந்ததும் விவாகம் செய்து கொண்டு விடுவோம்" என்றான்.

"சபாஷ் ராமு, எனக்குக் கல்யாண அழைப்பு அனுப்புவாய் அல்லவா?"

"உனக்கில்லாமலா? நிச்சயம் முதல் அழைப்பு உனக்குத்தான்" என்றான் ராமு.

"சரி ராமு, நான் இன்னும் இரண்டு மூன்று நாட்களில் திருச்சிக்குப் போய் விடுவேன். என்னை மறந்து விடாதே. அடிக்கடி கடிதம் போட்டுக் கொண்டிரு!" என்று சொல்லிய வண்ணம் எழுந்தான் சங்கரன்.

** ** **

**அ**தே இரவு. மணி சுமார் பத்து இருக்கும். 'சாந்தி கல்லூரி விடுதி'யின் கட்டிடம் ஒரே மௌனத்தில் ஆழ்ந்து கிடந்தது. அன்

றேடு அந்தக் கல்லூரி மாணவிகளின் பரீட்சைகள் எல்லாம் முடிவடைந்து விட்டன. ஆனபடியால் எல்லா மாணவிகளும் சீக்கிரமே படுக்கைக்குச் சென்று விட்டனர்.

ஆனால் அந்தக் கட்டிடத்தின் இரண்டாவது தளத்தின் வராந்தா ஒன்றில் நிலா வெளிச்சத்தில் கஸ்தூரியும் அவள் தோழி விமலாவும் உட்கார்ந்து பலமான குரலில் சுவாரஸ்யமாக அரட்டை அடித்துக் கொண்டிருந்தனர்.

"என்ன கஸ்தூரி, பரீட்சை யெல்லாம் ஒரு வழியாக முடிவடைந்து விட்டன. மேலே நீ என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டாள் அவள் தோழி.

"நீ என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்?" என்றாள் கஸ்தூரி.

"ஏன், கலியாணம் செய்து கொள்ளச் சொல்லுகிறேன்!" என்றாள் விமலா.

"கலியாணமா? விமலா நீ என்னைத் தவறாக நினைக்கிறாய். கலியாணம் செய்து கொண்டவர்களெல்லாம் என்னத்தைச் சாதித்து விட்டார்கள்! அவர்களைப் போல நான் அந்தப் பந்தத்தில் மாட்டிக் கொள்ளப் போவதில்லை. ஹாய்யாக வாழ்நாளெல்லாம் தனியாக இருக்கப் போகிறேன். ஏன், இன்னும் கேட்கப் போனால் நான் படித்த இந்த பி. எஸ்ஸி. படிப்பை வீணாக்கப் போவதில்லை. நம் நாட்டில் எவ்வளவு கிராமங்கள் இருக்கின்றன, தெரியுமா! அங்கே எவ்வளவு பேர் கல்வி அறிவு இல்லாமல் இருக்கிறார்கள். படிப்பின் வாசனையே இல்லாமல் அவதிப் படுகிறார்கள். அங்கே எல்லாம் போய் நான் பள்ளிக்கூடம் நிறுவிப் பாமர மக்களுக்கு எழுத்தறிவு புகட்டப் போகிறேன். இது நிச்சயம்!" என்றாள் கஸ்தூரி ஆவேசத்துடன்.

இந்தப் பிரசங்கத்தைக் கேட்டவுடன் கை கொட்டிக் கலகல வென்று சிரிக்க ஆரம்பித்து விட்டாள் அவளுடைய தோழி விமலா.

"கஸ்தூரி, உன்னைப் போல் எவ்வளவோ பேரைப் பார்த்து விட்டேன். வீரம் பேசி விட்டு ஒருவனிடம் அடிமையாகித் தங்கள் கொள்கைகளையே மறந்து வாழ்க்கை நடத்தி வருகின்றார்கள்" என்றாள் விமலா.

"விமலா, என்னையும் அவர்களில் ஒருத்தியாகச் சேர்த்து விடாதே. நான் பேசியதெல்லாம் காரியத்தில் செய்து காட்டுகிறேன். பிறகு நீ பேசு. அது சரி, நீ என்ன செய்யப் போகிறாய்?"

"நான் என் மனத்திலிருப்பதைச் சொல்லி விடுகிறேன். என் அண்ணாவின் நண்பர் ஒருவர் இருக்கிறார். நான் அவரைக் காதலிக்கிறேன்......" என்று இழுத்தாள்.

"சபாஷ், விமலா! என்றைக்கு முகூர்த்தம்? எனக்கு அழைப்பு அனுப்புவாய் அல்லவா?" என்றாள் கஸ்தூரி விளையாட்டாக.

"பொறுப்பில்லாமல் கலியாணமா? முதல் அழைப்பு உனக்குத்தான்" என்றாள் விமலா.

"சரி, எனக்குத் தூக்கம் கண்ணைச் சுழட்டுகிறது. வா, படுக்கைக்குப் போகலாம்!" என்று சொல்லியவாறே எழுந்தாள் கஸ்தூரி.

* * *

"ஏண்டாப்பா, சங்கரா! இந்தப் புகைப் படத்தைப் பார்த்து விட்டுப் பிறகு போயேண்டா!" என்று சொல்லியவண்ணம் ஒரு நாள் சங்கரனிடம் வந்தாள் அவன் தாயார். அந்தப் படத்தைக் கையில் வாங்கிக் கொண்டு, "அம்மா, பெண் நன்றாகத்தான் இருக்கிறாள். என்னை என்ன பண்ணச் சொல்லுகிறாய்?" என்றான் சங்கரன் எரிச்சலாக.

"பி.எஸ்ஸி வரையில் படித்திருக்காளாம். உன் ஜாதகத்தோடும் நன்றாகப் பொருந்தி வருகின்றது. நீ 'சரி' என்று சொல்லிவிட்டால் முகூர்த்தம் வைக்க வேண்டியதுதான் பாக்கி!" என்று கூறினாள்.

"அம்மா, இன்னொரு தடவை கலியாண விஷயமாய் ஏதாவது பேசினால் எனக்குக் கோபம் வரும். அதனால், ஊரை விட்டே கிளம்பி விடுவேன். ஆமாம், சொல்லி விட்டேன்" என்றான் மிகவும் கண்டிப்பாக.

"எங்கே போய் விடுவாயாம்?" என்று கேட்டாள்.

"நம் நாட்டில் இருக்கிற ஒவ்வொரு கிராமத்துக்கும் சென்று என்னால் இயன்ற வரை இலவச மருந்துவம் செய்து வரப் போகிறேன்" என்றான் சங்கரன்.

"இதுக்காகவா உன்னை உங்க அப்பா இவ்வளவு பணத்தைச் செலவழித்துப் படிக்க வைத்தார்?" என்று கேட்டாள் தாயார்.

"அப்பா என்ன சொன்னாலும் எனக்குக் கவலையில்லை.



ஏழை மக்களுக்காகத்தான் நான் உழைக்கப் போகிறேன். கலியாணம் செய்து கொண்டால் இதெல்லாம் நடக்காது. அதனால் நான் கண்டிப்பாகக் கலியாணம் செய்து கொள்ள மாட்டேன் என்கிறேன்!'' என்றான்.

** ** **

''ஏன்னா, உங்க அருமைப் பெண் கஸ்தூரி சொல்லுகிறதைக் கேட்டேளா?'' என்று சொல்லியபடி வந்தாள் கஸ்தூரியின் தாயார் அவள் அன்புக் கணவரிடம்.

''என்ன சொல்லுகிறாள்?''

''என்னவா? அவள் கலியாணமே செய்து கொள்ளப் போவதில்லையாம்'' என்றாள் அவள் தாயார் அதிசயத்துடன்.

''பின்னே என்ன செய்யப் போகிறாளாம்?''

''ஒவ்வொரு கிராமத்துக்கும் சென்று படிப்பு சொல்லிக் கொடுக்கப்போகிறாளாம்.''

''சரி, அப்படின்னா அந்த ஜோஸ்யர் கொடுத்த டாக்டர் பையன் ஜாதகத்தை வேண்டாம் என்று சொல்லிவிட வேண்டியதுதானா?'' என்று கேட்டார்.

''சரிதான்; அவளோ குழந்தை! ஏதோ பிதற்றுகிறாள். நீங்கள் மேலே காரியத்தைப் பாருங்கள்'' என்று சொல்லிய வண்ணம் சட்டென்று உள்ளே சென்றாள்.

** ** **

மாதங்கள் உருண்டோடின. சங்கரன் ராஜதானியிலே முதன்மையாகத் தேறினான். சர்க்காரே முன் வந்து அளித்த பெரிய உத்தியோகத்தை உதறி விட்டு ஒரு கிராமத்தில் மருத்துவச் சாலையை ஆரம்பித்தான்.

எடுத்த எடுப்பிலேயே சங்கரன் பெயர் பரவத் தொடங்கியது. அவன் மக்களிடையே சேர்ந்து பழகினான். அவர்களின் நலமே தன் நலம் என்று கருதினான்.

அதே கிராமத்திலே மற்றொரு அதிசயம் நிகழ்ந்தது! ''ஆரம்பப் பள்ளி'' என்ற தலைப்புடன் ஒரு புதிய பள்ளி ஆரம்பிக்கப்பட்டதுதான் அது! அதன் நிர்வாகி சாக்ஷாத் கஸ்தூரிதான்! காலையில் அவ்வூர் சிறுவர்கள் கல்வி கற்றுக் கொள்ள ஆரம்பித்தனர். இரவு வேளைகளில் முதியோர்கள் அந்தப் பள்ளியில் வந்து கல்வி கற்றுக் கொண்டனர்!

நுரையைக் கக்கிக் கொண்டு அதிவேகமாகச் செல்லும் அந்தக் காட்டாற்றின் தீரத்தை வியந்த வண்ணம் அமர்ந்திருந்தான் சங்கரன். அந்தச் சின்னஞ் சிறு கிராமத்தில் வளைந்து ஓடும் அந்தக் காட்டாற்றைக் கண்டால் அவனுக்கு மிகவும் பிடிக்கும். தினமும் மாலை வேளைகளில் அங்கே வந்து உட்கார்ந்து விடுவான். அதன் அழகில் தன்னை மறந்தவனாய் உட்கார்ந்து விடுவான் அவன்!

''ஐயோ, அம்மா'' என்ற தீனக்குரலைக் கேட்டுத் திடுக்கிட்டான் சங்கரன். அவன் பார்வை 'சட்'டென்று ஆற்றுப் பக்கம் சென்றது. அங்கே ஒரு பெண் ஆற்றில் மிதந்து அதிவேகமாகப் போய்க் கொண்டிருந்தாள்! சங்கரன் குடல் திடீரென எழும்பி மூச்சுக் குழலை அடைத்து விடும் போல் இருந்தது! மறு நிமிஷம் தன்னைச் சமாளித்துக் கொண்டான். சட்டையைக் கழற்றி விட்டு ஆற்றில் குதித்தான்.

மிகச் சிரமப்பட்டு அவளைக் கரை ஏற்றினான். முதல் உதவி செய்வதில் அவனுக்கு நிகர் அவன்தான்! தவிர அவன்தான் டாக்டராயிற்றே! அந்தப் பெண் கண்ணைத் திறந்தாள். இரண்டு மூன்று நிமிஷம் ஒருவரையொருவர் பார்த்தபடியே இருந்தனர். இருவரிடையே நிலவியிருந்த அந்தப் பயங்கர மௌனத்தை முதன் முதலில் டாக்டர் சங்கரன்தான் கலைத்தான்.

''தாங்கள் யார்? ஆற்றுப் பக்கம் வரக் காரணம் என்ன?'' என்றான் சங்கரன்.

அவள் 'சட்'டென எழுந்து உட்கார்ந்தாள். பிறகு ''நான் இவ்வூரில் இருக்கும் ஆரம்பப் பள்ளியின் உபாத்தியாயினி. இந்த ஆற்றின் அழகைக் காணத் தினமும் தவறாமல் வருவேன். இன்று இங்குள்ள ஒரு சேற்றில் காலை வைத்து விட்டேன். வழுக்கி என்னையுமறியாமல் விழுந்து விட்டேன். இன்று நீங்கள் செய்த உதவி மகத்தானது. நான் என்றும் உங்களுக்குக் கடமைப் பட்டிருக்கிறேன்'' என்றாள் நாத்தழுதழுக்க.

அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான் சங்கரன். இதற்கு முன் இவனை எங்கேயோ பார்த்திருக்கிறோமே என்ற யோசனையால் அவன் தன்னை மறந்தவனாய் இருந்தான். பிறகு திடீரென்று, "நீங்கள் பி. எஸ்ஸி. வரையில் படித்திருக்கிறீர்களா?" என்றான்.

"ஆமாம். உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்றாள் ஆச்சரியத்தோடு.

"என் தாயார் உங்கள் புகைப் படத்தைக் காண்பித்து உங்களைப் பற்றிய விவரம் கூறிக் கல்யாணம் செய்து கொள்" என்றாள்.

"நீங்கள் என்ன சொன்னீர்கள்?" என்றாள் அவள் ஆர்வத்துடன்.

"நான் ஒருவரையுமே விவாகம் செய்து கொள்ளப் போவதில்லை என்று என் நண்பன் ஒருவனிடம் சபதம் செய்திருக்கிறேன். ஆதலால் கலியாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்று அவர்களிடம் சொல்லி விட்டேன்!" என்றான் சங்கரன்.

"என்ன நீங்களும் சபதம் செய்தீர்களா? நானும் என் சினேகிதி ஒருத்தியிடம் சபதம் செய்தேன்" என்றாள் ஆச்சரியத்தோடு.

"நம் இருவர் சபதமும் இவ்வளவு சீக்கிரத்தில் தவிடுபொடியாகும் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. ஆனால் நம் இருவர் மனமும் எல்லாவிதத்திலும் ஒன்றாய் இருக்கின்றது. எல்லாம் விதியின் விளையாட்டுதான்!" என்றான் சங்கரன்.

"என் தோழி விமலாவின் முகத்தில் எப்படி விழிப்பேன்?" என்றாள் கஸ்தூரி.

வெகு சீக்கிரமே பள்ளியும் மருத்துவச் சாலையும் ஒன்று சேர்ந்தன! அதி விரைவில் கிராமம் முன்னேறி எல்லா விதத்திலும் சிறந்து விளங்கியது! சங்கரனுக்கும் கஸ்தூரிக்கும் அந்தக் கிராமத்திலே வெகு தடபுடலாக விவாகம் நடந்தேறியது!

** ** **

"என்னுங்க! இதைப் பார்த்தீர்களா?" என்று சொல்லியபடி ஒரு நாள் கஸ்தூரி ஒரு தினசரித் தாளைக் கொண்டு வந்தாள்.

"என்ன?" என்றான் சங்கரன்.

"படிக்கிறேன் கேளுங்கள்" என்று சொல்லியபடி படிக்க ஆரம்பித்தாள்.

"விமலா என்ற பதினெட்டு வயதுப் பெண் தான் காதலித்த இளைஞனை மணக்கப் பெற்றோர்கள் சம்மதிக்காததால் ஓடும் ரயிலிலிருந்து விழுந்து உயிர் விட்டாள்" என்று படித்தாள். பிறகு "அவள்தான் என்னுடைய சினேகிதி விமலா. அவளிடம்தான் நான் அம்மாதிரி சபதம் செய்தேன்" என்றாள் அவள் விக்கியபடியே.

"கஸ்தூரி, இந்தா இதைப் படித்துப் பார்" என்று சொல்லியபடி ஒரு கடிதத்தை நீட்டினான் சங்கரன்.

அவசரம் அவசரமாக அதைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள் கஸ்தூரி.

"அன்புள்ள சங்கர்,

நாமொன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும் என்பார்களே அது நம் விஷயத்தில் முற்றிலுமே உண்மையாகி விட்டது. அன்று நீ கடற்கரையில் பேசிய வீரம் காற்றோடு காற்றாய்ப் போய் விட்டது.

நாம் பார்த்த இளைஞனையேதான் விவாகம் செய்து கொள்ள வேண்டும் என்று விமலாவின் பெற்றோர்கள் ஒரே காலில் நின்றபடியால் எனக்காகத் தன் உயிரையே விட்டுவிட்டாள்! அவள் அன்புக்கு ஈடு இணை ஏது? சங்கர்! அவள் போனபின் என் வாழ்க்கையே கசந்துவிட்டது. எங்கு நோக்கினாலும் அவள் அழகிய முகம்தான் கண்ணெதிரே வருகின்றது! நான் என்ன செய்வது?

நாம் கட்டிய மனக் கோட்டை தூள் தூளாகி விட்டன. சங்கர், எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நான் உன் கிராம நிர்வாகத்தை ஏற்றுக் கொள்ளுகிறேன். பாமர மக்களுடன் பழகினாலாவது என் துக்கத்தை மறக்கலாமல்லவா? உன் மனைவியும், என் விமலாவின் தோழியுமாகிய கஸ்தூரிக்கு என் வணக்கத்தைத் தெரிவியுங்கள்.

உன் அருமை நண்பன் ராமு."

இந்தக் கடிதத்தைப் படித்த கஸ்தூரியின் கண்கள் கலங்கின. அவளையும் அறியாமல் கையிலிருந்த கடிதம் நழுவிக் கீழே விழுந்தது.




## 8. டுமீல், டுமீல்!

அவன் கையைப் பிடித்துக் கொண்டதும் பூபதிக்கு, அந்த நல்ல குளிர் காற்று வீசும் இடத்திலும் 'குப்' பென்று வியர்த்து விட்டது. அவன் தனக்குத் தும்மல் ஒரு சத்துருவாக வந்து சேரும் என்று சிறிதும் எதிர் பார்க்க வில்லை.

"அடே, உண்மையைச் சொல்லி விடு. இங்கே எப்பொழுது வந்தாய்? ஏன் வந்தாய்?" என்று மிகவும் கடுமையான குரலில் கேட்டான் அந்த முரடன்.

பூபதிக்குச் சமயோசிதமாக ஒரு யுக்தி தோன்றியது.

"என்ன, நானா? சாயங்காலமே சாப்பாடு முடிந்ததும் இங்கே வந்து விட்டேன். காற்று சுகமா யிருக்கவே படுத்து நன்றாய்த் தூங்கி விட்டேன்!" என்று சொன்னான் பூபதி.

அந்த ஆள் அவனை ஒரு முறை விறைப்பாகப் பார்த்து விட்டு, "ஜாக்கிரதை, பொய் மட்டும் சொல்லாதே!" என்று சொல்லி விட்டுப் போய் விட்டான்.

பூபதி, 'அப்பாடி, தப்பிப் பிழைத்தோம்!' என்று நினைத்துக் கொண்டான்.

பிறகு பூபதி அண்ணாந்து வானத்தைப் பார்த்தான். விடிய இன்னும் கொஞ்ச நேரம் தான் இருந்தது. வானம் இலேசாக வெளுக்க ஆரம்பித்திருந்தது. பளபள வென்று வெள்ளித் தட்டு மாதிரி இருந்த சந்திரன் இப்போது அலுமினியத் தட்டு மாதிரி ஒளி குன்ற ஆரம்பித்து விட்டான்.

அன்று முழுவதும் பூபதிக்கு அந்த முரட்டு மனிதர்களின் சதிக் காரியங்களைக் கவனிப்பதற்கே சரியா யிருந்தது. அந்த மனிதர்களின் கண்களில் படாமல் மிகவும் சிரமத்துடன் அவர்களது நடவடிக்கைகளைக் கவனித்து வந்தான். இரவு பத்து மணிக்கு யாருக்கும் தெரியாமல் சுமதியைச் சந்தித்துத் தினசரி நடக்கும் காரியங்களை அவளிடம் தெரிவித்து வந்தான்.

கடந்த ஒரு வார காலமாகப் பூபதி சரியாகத் தூங்குவதே இல்லை. சரியாகச் சாப்பிடுவதுமில்லை. எப்பொழுதும் யோசனையிலேயே ஈடுபட்டிருந்தான்.

அன்று இரவு சுமதியை வழக்கம் போல் இரவு பத்து மணிக்கு மேல் சந்தித்தான். கப்பல் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. யோசனையில் ஆழ்ந்திருந்த பூபதியைப் பார்த்து, சுமதி இலேசாகச் சிரித்தாள்.

"என்ன குடி முழுகிப் போகும்படியான கவலை வந்து விட்டது?" என்று மெல்லிய குரலில் அழகாகக் கேட்டாள் சுமதி.

"சுமதி, நீ கவலை என்பதையே அறியாத வானம்பாடியாய் இருக்கிறாய். ஆனால் எனக்கு என்னவோ உன்னைப் பற்றியே கவலையா யிருக்கிறது. இந்த முரடர்களிடமிருந்து எப்படித் தப்பிச் செல்லுவது என்று தெரிய வில்லை. கப்பலோ நில்லாமல் போய்க் கொண்டே யிருக்கிறது."

"பூபதி, நீங்கள் என் உள்ளத்தை அறிந்திருந்தால் இப்படிப் பேச மாட்டீர்கள். நான் என்ன செய்ய முடியும்? நான் தற்போது ஒரு கைதி. என் விடுதலை உங்கள் கையிலிருக்கிறது!" என்று கண்களில் நீர் ததும்பச் சொன்னாள் சுமதி.

"சுமதி, நீ கொஞ்சங்கூட வருத்தப் படாதே! நாம் இருவரும் தப்புவதற்காகத் நான் ஒரு வாரமாகச் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். இவர்கள் போடும் திட்டங்களை யெல்லாம் இரவு முழுவதும் தூங்காமல் விழித்துக் கொண்டிருந்து சர்வ ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொண்டு வருகிறேன். முக்கியமாக ஒரு விஷயம். நீயும் நானும் சந்திக்கும் விஷயம் அவர்களுக்குத் தெரியவே கூடாது. ரகசியமாகவே நாம் நம்முடைய வேலைத் திட்டங்களை நடத்த வேண்டும்."

"பூபதி, இந்தக் கப்பலிலிருந்து நாம் தப்பிச் செல்லுவது எப்படி? சுறு மீன்களுக்கு இரையாக வேண்டியதுதான். இந்தப் பொல்லாத மனிதர்கள் நம்மைத் தப்பி ஓட விட்டு விட்டு வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பார்களா? எனக்கு ஒன்றுமே புரிய வில்லை!" என்று கூறிச் சுமதி கண் கலங்கினாள்.

"சுமதி, பயப்படாதே! நாளை இரவு உன்னை இதே இடத்தில் சந்திக்கிறேன்..

நீ எதற்கும் தயாராயிருக்க வேண்டும். எத்தகைய ஆபத்து வரும் என்று என்னால் ஒன்றும் இப்போது சொல்ல முடியாது. நாளை இரவு நமக்கு ஒரு ஆபத்து நேரப்போகிறது...... சுமதி, உனக்கு நீந்தத் தெரியுமா?" என்று கேட்டு விட்டுப் பூபதி நாலு புறமும் பார்த்தான்.



"ஆகா! நன்றாய் நீந்தத் தெரியும்!" என்றாள் சுமதி.

"படகில் துடுப்பு தள்ளத் தெரியுமா?"

"ஆகா, நன்றாய்த் தெரியும்!"

"அது உனக்கு எப்படித் தெரிந்தது? நீதான் ராஜ குமாரியாயிற்றே!"

"பூபதி, எங்கள் நாட்டின் தலைநகரத்தில் ஒரு பெரிய ஏரி இருக்கிறது. அதற்கு நீல ஏரி என்று பெயர். அந்த ஏரி ஜலம் நீல நிறமாகவும் மிகவும் அற்புதமாகவும் இருக்கும். அந்த ஏரியில் என் தோழிகளுடன் நீந்தி விளையாடுவேன். எல்லோருமாகச் சேர்ந்து வெகு நேரம் படகு தள்ளிக் கொண்டு போய் ஆனந்தமாகப் பொழுது போக்குவோம். ஆகா, அந்த நாட்களை நினைத்தால் எனக்கு இப்போது மனம் கலங்குகிறது. மீண்டும் நான் என் தாய் தந்தையர்களைப் பார்ப்பேனா? அந்த இன்ப வாழ்வை அடைவேனா?" என்றாள் சுமதி தழுதழுத்த குரலில்.

"சுமதி, மனம் தளராதே! தைரியமாயிரு. எப்படியாவது உனக்கு உன் அரண்மனை வாழ்வை அளிக்கத்தான் முயன்று கொண்டிருக்கிறேன்!" என்றான் பூபதி.

"நீங்கள் இருக்கும் போது எனக்கு என்ன கவலை?" என்றாள் சுமதி.

சுமதி இதைச் சொன்னவுடன் பூபதி சிறிது யோசித்து விட்டு, "சரி, நாளை இரவு உன்னைச் சந்திக்கிறேன்!" என்றான்.

"என்ன விபத்து நேரும் என்று சொல்ல மாட்டேன் என்கிறீர்களே! தெளிவாய்ச் சொல்லுங்களேன்!"

. . .

"நாளை மறு நாள் உன்னையும் என்னையும் இந்தக் கப்பலிலிருந்து வேறு ஒரு கப்பலுக்கு அனுப்புகிறார்கள். அந்தக் கப்பலில் நம்மைச் சேர்ப்பதற்கு முன்பு நாம் தப்பிவிட வேண்டும். அவர்களிடம் சிக்கி விட்டால் நாம் உயிர் தப்ப முடியாது. யாரோ வரும் சத்தம் கேட்கிறது. நீ உடனே மறைந்து கொள். நாளை இரவு விழிப்புடன் இரு!" என்று கூறி விட்டுப் பூபதி போய் விட்டான்.

சுமதி தன்னிடத்துக்குச் சென்றாள். ஆனால் அவள் மனம் பூபதி சொன்ன விஷயங்களிலேயே லயித்துக் கிடந்தது. என்ன ஆபத்து வருமோ என்று பயந்து அன்று இரவைக் கழித்தாள்.

மறு நாள் பூபதி மிகவும் சுறுசுறுப்பாயிருந்தான். அந்த முரட்டு ஆட்களின் காரியங்களை மிகவும் ரகசியமாகக் கவனித்துக் கொண்டான்.

இரவு மணி பத்தாகி விட்டது. 'டாண், டாண்' என்று மணி அடித்தது. எல்லோரும் படுக்கப் போனார்கள். பூபதி பதுங்கிப் பதுங்கிக் கப்பலின் மேல் தளத்துக்குப் போய்ச் சேர்ந்தான். அங்கே சுமதி காத்துக் கொண்டிருந்தாள். வானத்தில் வெண்ணிலவு அழகாகப் பவனி வந்து கொண்டிருந்தது. நட்சத்திரங்கள் கண்ணைச் சிமிட்டின.

பூபதி மெல்லிய குரலில், "சுமதி, தயாராயிருக்கிறாயா?" என்று கேட்டான்.

"தயாராயிருக்கிறேன். என்னத்துக்கு என்று சொல்லவில்லையே!"

"இன்னும் பதினைந்து நிமிஷத்தில் தெரிந்து விடும்!" என்று கூறி விட்டுப் பூபதி கீழே குனிந்து எதையோ நகர்த்தினான். ஒரு வழி கீழே தென்பட்டது. சுமதியின் கையைப் பிடித்துக் கொண்டு பூபதி அந்த வழியில் இறங்கினான். சுமதிக்கு அவனோடு வேகமாக இறங்குவது சிரமமாயிருந்தது. பத்து நிமிஷங்கள் வரையில் பூபதியும் சுமதியும் கீழே இறங்கிக் கொண்டேயிருந்தனர். கடைசியில் கப்பலின் கீழ்த் தளத்தின் தாழ்வாரத்தில் இருந்த ஒரு சிறு படகில் சுமதியுடன் பூபதியும் உட்கார்ந்து கொண்டான்; படகில் இரண்டு துடுப்புகள் இருந்தன. சுமதியிடம் ஒன்றைக் கொடுத்தான்; ஒன்றை வைத்துக் கொண்டான் பூபதி. அடுத்த நிமிஷம் பூபதி எழுந்து எதையோ பலமாக ஒரு தள்ளுத் தள்ளினான். அவ்வளவுதான். அந்தப் படகு அப்படியே பெயர்ந்து சமுத்திரத்தில் தொப்பென்று விழுந்தது. சுமதி, பூபதியின் கரங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள். அவன் நினைத்தபடி படகு கவிழ்ந்து விடவில்லை; மிதந்து நகர ஆரம்பித்தது. பூபதி உடனே வேகமாகத் துடுப்பைப் போட ஆரம்பித்தான். அடுத்த நிமிஷம் கப்பலின் மேல் தளத்திலிருந்து ஒருவன் படகை நோக்கித் துப்பாக்கியை உயர்த்தினான். 'டுமீல், டுமீல்' என்று வேட்டுச் சத்தம் கேட்டது. படகு மறைந்தது. (தொடரும்)

குடும்பத்திற்கு
குதூகலம் அளிப்பவை

**TSR**

சந்தனாதி தைலம்
அரைக்கீரை விதைத் தைலம்
பிருங்காமலக தைலம்
கோகுல் கூந்தல் தைலம்

**டி. எஸ். ஆர். & கோ., கும்பகோணம்**

சென்னை நகரத்திற்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸிஸ், 37, ஜானி ஜான்கான் ரோடு, திருவல்லிக்கேணி. கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி செட்டியார், கோயமுத்தூர்.

---

# பாதுகாப்புடன் கூடிய சேவை

'ஜுபிடர் ஜெனரல்' ஸ்தாபனம் கடந்த 34 ஆண்டுகளுக்கு மேலாக இணையிலா சிறந்த சேவை செய்து வருவதுடன், நாளுக்கு நாள் இன்ஷ்யூரன்ஸ் உலகிலே முதன்மை ஸ்தானம் பெற்று வருகிறது. 'ஜுபிடர் ஜெனரல்' ஸ்தாபனத்தில் நீங்கள் இன்ஷ்யூர் செய்து கொள்வதால் உங்களுக்கு பரிபூரண பாதுகாப்பு, சிறந்த சேவை முதலியவைகள் நிச்சயமாகக் கிடைக்கிறது.

ஆயுள், மற்றும் இதர சகலவித இன்ஷ்யூரன்ஸ்
அலுவல்களும் ஏற்றுக் கொள்ளப் படுகின்றன.

*மொத்த ஆஸ்தி ரூ. 3,35,00,000க்கு மேல்*

# தி ஜுபிடர் ஜெனரல்

## இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

தலைமை ஆபீஸ்: பாங்க் தெரு :: போர்ட் :: பம்பாய்

தென் இந்தியாவின் முக்கிய ஆபீஸ்: 'ஜுபிடர் ஹவுஸ்' 167, பிராட்வே, மதராஸ்

இந்தியா, பாகிஸ்தான், பர்மா, சிலோன், ஏடன், ஆப்பிரிக்காவில் கிளை ஆபீஸ்களும் ஏஜன்ஸிகளும் உள்ளன

அட்மினிஸ்ட்ரேட்டர்: திவான்பகதூர் ஆர். வரதாச்சாரி



# எது காரணம்?

கே. ஆர். கௌசல்யா

ஒவ்வொரு மாதமும் தன் சொற்ப சம்பளத்தை வாங்கும்போது, கண்ணீர் விட்டுக் கலங்குவான் சோமு. பி. ஏ. பரீட்சையில் தேறியிருந்த அவனுக்குத் தன்னைவிடச் சாதாரணப் படிப்புப் படித்தவன் எல்லாம் நிறையச் சம்பாதிக்கத் தான் மட்டும் இப்படிச் சிரமப்படுவது அவன் மனசுக்கு ரொம்பவும் கஷ்டமாயிருந்தது.

“என்னமோப்பா சோமு! உன் நக்ஷத்திரம் பரணி. ‘பரணி நக்ஷத்திரக் காரர்கள் தரணி யாளுவார்கள்’ என்று வசனம் சொல்லுவா. நீ எத்தனையோ அதிர்ஷ்டமாகத்தான் இருக்கப் போறே......போகப் போகப் பார்க்கலாமே.,.....இப்பவே ஏன் மனசு ஒடிஞ்சு போயிடறே?” என்று அவனைத் தேற்றி வந்தாள் தாய் தங்கம்மாள்.

இதனிடையில் தான் சோமுவுக்கும் விஜயத்துக்கும் விவாகம் நடந்தேறியது. விவாகம் நடந்த மறுமாதமே விஜயம் சோமுவுடன் குடித்தனம் செய்யப் புக்ககம் வந்தாள்.

சோமு எப்போதுமே நல்ல உழைப்பாளி. உண்மையாகவும், நேர்மையாகவும், சாந்தமாகவும் நடந்து கொள்ளும் சுபாவம் அவனுடையது.

அன்று ஆபீஸில் தன் ஆசனத்திலமர்ந்து மும்முரமான வேலையில் ஈடுபட்டிருந்தான் சோமு. மானேஜிங் டைரக்டர் அவனை அழைப்பதாகத் தகவல் வந்தது. எழுந்து அவர் அறைக்குச் சென்றான். பயபக்தியுடன் தன் முன் வந்து நின்ற சோமுவை மலர்ந்த முகத்துடன் ஏறிட்டு நோக்கினார். “மிஸ்டர் சோமு!...வந்த நாள் முதல் நான் உம்முடைய உழைப்பையும் நேர்மைத் திறனையும் கவனித்துக் கொண்டு தானிருக்கிறேன். அதற்கேற்ப உமக்கு விரைவில் நல்ல ஸ்தானமொன்று அளிக்க வேண்டுமென்று எண்ணியிருந்தேன். உதவி மானேஜர் ராகவன் திருச்சியிலுள்ள நம்முடைய கிளைக் காரியாலயத்துக்கு மாற்றலாகிப் போகிறார். அந்த ஸ்தானத்தை மனமுவந்து உமக்களிக்கிறேன் நான். என்ன சம்மதம்தானே!” என்று அவர் கூறி முடித்தபோது சோமுவுக்கு வியப்பு மிகுதியில் தொண்டை யடைத்தது. நாத் தழு தழுக்க, தன் இதய பூர்வமான நன்றியையும், வந்தனத்தையும் அவரிடம் தெரிவித்து விட்டுத் தன் ஆசனத்தில் போய் அமர்ந்தான் அவன்.

அன்று மாலை வீட்டுக்கு வந்து மட்டற்ற மகிழ்ச்சியுடன் அந்த சந்தோஷ சமாசாரத்தை அவன் சொன்னபோது தங்கம்மாளும் விஜயமும் ஆனந்த மிகுதியால் பொங்கி வழிந்தனர். தங்கம்மாள் தன் அருமை சிநேகிதி எதிர் வீட்டு எச்சுவிடமும், விஜயம் தன் பிரிய சகி பக்கத்து வீட்டுப் பங்கஜத்திடமும் பெருமைக்குரிய அந்தச் செய்தியைத் தெரிவிக்கப் பறந்து விட்டனர்.

அடுத்த மாதம் பிறந்தவுடன் கனை கனையாக இருநூற்றெழுபது ரூபாய் சம்பளப் பணத்துடன் அவன் வீட்டினுள்ளே நுழைந்தபோது ஆரத்தி சுற்றிக் கொட்டாத குறையாக அவனைப் பிரமாதமாக வரவேற்றனர் விஜயமும் தங்கம்மாளும்.

அன்றிரவு சாப்பிட உட்கார்ந்தபோது சர்க்கரையும் வாழைப் பழமும் போட்டு,



பம்பாய் ஜே ஹிந்த் கலாசாலையில் ரூப் கலா கேந்திரத்தின் ஸ்தாபகர் ஸ்ரீ வெங்கட்டராவ் லெஸ்டாவின் குமாரிகளான கோமளா, லக்ஷ்மியின் பரதநாட்டியம் ஏப்ரல் 4-உ சிறப்பாக நடந்தேறியது. இரு நடன குமாரிகளும் ஸ்ரீ ஜி. வி. ரமணியிடம் நடனம் பயின்றவர்கள். மேற்படி நடன வைபவத்துக்குத் தலைமை தாங்கிய மத்திய சர்க்கார் தொழில் மந்திரி ஸ்ரீ வி. வி. கிரி அவர்கள் நாட்டியமாடிய இரு குமாரிகளின் வித்வத்தையும் வியந்து பாராட்டினார்.

பருப்பு பாயசத்துடன் உணவு பரிமாறினாள் தங்கம்மாள் தன் அருமை மகனுக்கு. "இப்போத் தாண்டா சோமு என் மனசுக்குத் திருப்தியாயிருக்கு. நீ படித்த படிப்புக்கும், உழைச்ச உழைப்புக்கும் எல்லாத்துக்கும் மேலே உன் பரணி நக்ஷத்திரத்துக்கும் சரியானபடி பலன் கிடைச்சுடுத்து. நீ வீணாக மனசு இடிஞ்சு போய் உட்கார்ந்தாயே தவிர நான் சொல்லிண்டே இல்லையா...?'' என்றாள் பெருமையுடன்.

அவள் சொல்ல ஆரம்பித்தபோது தேன் குடித்த நரியைப் போன்று துள்ளும் உள்ளத்துடன், புது நாட்டுப் பெண் என்பதற்கொப்பச் சமையலறை வாயிற்படியருகில் அடக்க வொடுக்கமாக நின்றிருந்த விஜயத்தின் முகம் திடீரென்று மாறியது. விடு விடுவென்று கூடத்துப் பக்கம் சென்று, பக்கத்து வீட்டுப் பக்கமிருந்த ஜன்னலை 'படக்'கென்று திறந்தாள். "பங்கஜம்! பங்கஜம்!'' என்று தாழ்ந்த குரலில் கூப்பிட்டு ஜன்னல் கதவுகளில் பொருத்தும் கொக்கியை 'கிளிக்'கென்று ஓசைப்படுத்தினாள். சிநேகிதிகள் இருவருக்கும் ஒருவரை மற்றொருவர் கூப்பிட அதுதான் சமிக்ஞை.

"அரைக்கரண்டி ரசம் விட்டுட்டு எங்கேடீ ஓடறே? இந்தா!'' என்று தன் கணவன் பரிதாபமாக அலறுவதையும் பொருட்படுத்தாமல் தட தட வென்று ஓடி வந்தாள் பங்கஜம், "என்னடீ விஷயம்?'' என்று அவளைக் கேட்டவாறே.

"பாருடீ அநியாயத்தை! அன்றைக்கு அகத்துக்காரருக்கு வேலை உயர்ந்திருக்கிறது என்று உன்னிடம் சொன்ன போது நீ என்ன சொன்னே? 'எல்லாம் உன்னுடைய கால் வைத்த ராசிடீ! இத்தனை நாளாக அம்மாவும் பிள்ளையும் மூக்காலே அழுவா சம்பளம் போதவில்லை என்று' என்றுதானே சொன்னே? எங்க மாமியார் சொல்கிறார், 'என் அகத்துக்காரருக்குப் பரணி நட்சத்திரமாம். அதுதான் காரணமாம். என்னைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லுவாளாக்கும்னு பார்க்கிறேன்! ஊஹூம்!'' என்று படபடவென்று பொரிந்து கொட்டினாள் விஜயம்.

"நல்ல சாமர்த்தியம்டீ அந்தக் கிழத்துக்கு. இதுக்குத்தான் மாமியார் இல்லாத புக்ககமாக வாய்க்கணுங்கிறது. நான் இருக்கிறேன் பார் இதோ ஹாயாக!'' என்று பங்கஜம் தன் 'லெக்சரை' ஆரம்பித்த போது, "ஏண்டீ! சாப்பிட்ட சாப்பாடு ஜீரணமாகிவிடும் போலிருக்கே நீ வருவதற்குள்ளே! ரசத்தை வச்சுட்டாவது போயிருந்தால் நான் ஊற்றிக் கொள்வேனோ இல்லையோ? கையோடு எடுத்துக் கொண்டு போய் விட்டாயே!'' என்று பாதிச் சாப்பாட்டில் எழுந்து வந்து கணவன் அதட்டல் போடவே, மீதி பேச்சுக்குத் 'தொடரும்' போட்டுவிட்டு உள்ளே ஓடினாள் பங்கஜம்.

அன்று இரவு 'உம்'மென்று மூகத்தை வைத்துக் கொண்டு புத்தகமொன்றைப் படிக்கும் பாவனையிலிருந்தாள் விஜயம். "என்ன விஜயம்! அகத்துக்காரருக்கு வேலை உயர்ந்திருக்குன்னு அந்த மகிழ்ச்சியிலே நீ ஒரு சுற்று பருத்துவிட வேண்டாமோ? ஓகோ! அதுதான் உன் முகம் கொஞ்சம் உப்பியிருக்கா?'' என்று கொஞ்சலாகக் கேட்டுக் கொண்டே, அவள் முகத்தைத் தன் பக்கமாகத் திருப்பினான் சோமு. ஒரு அசட்டுப் புன்னகை புரிந்தவாறே, அன்புடன் பற்றிய அவனது கரத்தை மெல்ல எடுத்து விட்டாள் விஜயம். "அடாடா! புரிந்தது, புரிந்தது! தேவியின் கோபத்துக்குக் காரணம் புரிந்து



## இப்படியும் நேரிடலாம்!




லீவு கிடைக்காத தொல்லையினால் இனிமேல் ஆபீஸிலேயே கல்யாணம் செய்து கொள்ளும்படியாகவும் நேரிடலாம்!




விட்டது. "தேவி! விரைவிலேயே தங்கள் கழுத்துக்கு ஒரு மாங்காய் மாலை. காதுக்கு... ஒரு..." என்று கள்ளங் கபடின்றி அவன் மேலும் தொடர்ந்த போது "சரி போதுமே" என்று மீண்டும் அவன் பேச்சை இடை மறித்து, "தூக்கம் கண்ணைச் சுற்றுகிறது" என்று படுத்து விட்டான் விஜயம்.

மறு நாள் காலை சோமு சாப்பிட உட்கார்ந்த போது, "நான் மட்டும் கிளைச் சேண்டா சோமு உன் நட்சத்திரம் பரணி யாச்சே!" என்று மீண்டும் பழைய பல்லவியைத் தொடங்கினாள் தங்கம்மாள்.

"ஏனம்மா! சும்மா அதையே ஏன் நாம் சொல்லணும்? விஜயம் நம்மாத்துக்கு வந்த வேளைதான், அவன் கால் ராசிதான் இதற்குக் காரணம்னு நான் சொல்றேன். இல்லாவிட்டால் இத்தனை நாளாக இல்லாத உத்தியோக உயர்வு இப்போது ஆவானேன்?" என்றான். விஜயத்தின் மனப் போக்குத் தெரியாமலே ஏதோ எதேச்சையாக அவனாகவே சொன்னான்.

"நன்னாயிருக்குடா நீ சொல்றது! அவன் கால் ராசியுமில்லை; வால் ராசியுமில்லை. எல்லாம் உன் பரணி நட்சத்திரத்தின் மகிமைதான். காக்காய் உட்காரப் பனம் பழம் விழுந்தாப்பலே அவன் வருவதற்குச் சரியாய் இது நேர்ந்திருந்தா அது அவனாலே என்றுதான் அர்த்தமோ? அழகுதான்!" என்றாள் தங்கம்மாள் விறைப்புடன், 'நக்'கென்று ஈயச் செம்பை மேடை மீது வைத்தவாறே. தற்செயலாய் சோமு தலையை நிமிர்த்திய போது உறியிலிருந்து மோர் பாத்திரத்தை எடுத்துக் கொண்டிருந்த விஜயம் தங்கம்மாளின் வார்த்தைகளைக் கேட்டவுடன், படக்கென்று முகத்தைத் தோள் பட்டையில் இடித்துக் கொண்டதைக் கவனித்து விட்டான். அப்போதுதான் அவனுக்கு விஷயம் விளங்கியது, தன் உத்தியோக உயர்வு சம்பந்தமாக ஏன் விஜயம் அதிக உற்சாகமோ, மகிழ்ச்சியோ காட்டவில்லை என்று.

மாலை காரியாலயத்திலிருந்து வந்த போது கையில் காப்பியுடன் உள்ளே நுழைந்த விஜயத்தைக் கனிவுடன் நோக்கினான் சோமு. "இதோ பார், விஜயம்! இப்போதுதான் உன் சில நாளைய மனக் கலக்கத்துக்குக் காரணம் எனக்குப் புரிந்தது. அம்மா கிடக்கிறாள்! நான் சொல்கிறேன், விஜயத்தின் மலர்க் கரத்தை நான் பற்றியதன் மகிமைதான் என் வேலை உயர்வுக்கு, என் அதிர்ஷ்டத்துக்கு எல்லாம் காரணம். இப்போ திருப்திதானே?" என்றான் அவள் முகவாயை அன்புடன் பிடித்து நிமிர்த்தியவாறே.

விஜயத்தின் நெஞ்சு கல்லாக இருந்தது. "ஆமாம்! நீங்க என்னவோ எனக்கு விட்டுக் கொடுத்தாப் போல் பேச வேண்டாம். கல்யாணம் பண்ணி நாட்டுப் பெண் புக்ககம் வந்தா அதற்குப்பிறகு புக்ககத்திலே நடக்கும் குறிப்பிடத் தக்க விசேஷம் எதுவாயினும் அது அவள் கால் வைத்த மகிமை என்றுதான் சொல்லுவா! யாரை யாவது கேட்டுப் பாருங்கோ! உங்க அம்மாவுக்குத்தான் அதை ஒத்துக் கொள்ளப் பிடிக்காமல் நெஞ்சு பாறாங்கல்லாயிருக்கு!" என்றாள் கண்ணீர் விட்டவாறே. அவளுடைய துடுக்குத் தனமான பேச்சில் சோமுவின் உள்ளம் சாம்பி விட்டது. அதற்கு மேலும் அந்தப் பேச்சைத் தொடர விரும்பவில்லை அவன்.

விஜயத்தின் அண்ணா குழந்தைக்கு ஆண்டு நிறைவு என்று தன் மாமனார் வந்து அழைத்த

தன் பேரில் அவனை அவன் பிறந்த வீட்டுக்கு அழைத்துச் சென்றான் சோமு. ஆண்டு நிறைவுக்கு வந்திருந்த தன் உறவினர்கள் எல்லோரிடமும் தன் கணவனின் உத்தியோக உயர்வு பற்றிக் கூறித் தம்பட்டமடித்துக் கொண்டு, அம்மாவிடம், தன் மாமியாருடைய குத்தலான பேச்சையும் சொல்லிக் குற்றம் சாட்டி, "ஏனம்மா!...அப்படி என் கணவருடைய தரணியாள வைக்கும் பரணி நட்சத்திரம் என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளும் முன்பே தன் மகிமையைக் காட்டுவதுதானே என்கிறேன்!" என்று கர்வமாகப் பேசியது மாடியில் உட்கார்ந்திருந்த சோமுவின் காதுகளில் தெளிவாக விழுந்தது.

அத்தனை நாட்களாக விஜயத்திடம் சோமுவுக்குக் கொஞ்சம் அநுதாபம் இருந்தது—தன் நாட்டுப் பெண்ணைப்பற்றித் தங்கம்மாள் பெருமையாகப் பேசிக் கொள்ள வில்லையே என்று. அதற்காகத்தான் அவன் சமயங்களில் விட்டுக் கொடுக்காது பேசினான். ஆனால் அதுபோன்று விஜயத்துக்குச் சமயம் நேர்ந்தபோது அவனைப்போல் அவளுக்குத் தன் கணவனுக்காக விட்டுக் கொடுத்துப் பேசும் மனப்பான்மை அணுவளவேனும் இல்லை. அதுமட்டுமின்றித் தற்பெருமைக்கு ஆசைப்பட்ட அவள் உள்ளம் தன் கணவன் விஷயமாகத் தான் செய்ய வேண்டிய ஒரு பெரும் கடமையில் தவறி விட்டது. ஆம்! அவனுடைய உத்தியோக உயர்வு பற்றி ஒரு மகிழ்ச்சிச் சொல்லேனும் அவள் வாயினின்று உதிர்ந்ததா? ... அன்று முதல் இதே முகச் சுளிப்பு. வாதாடல்.

அன்று அலுவலகத்திலிருந்து வீட்டுக்கு வந்த சோமு உடைகளைக் கூட மாற்றிக் கொள்ளாமல் சோர்வுடன் நாற்காலியில் சாய்ந்து கொண்டான். தலையைத் தன் இரு கைகளாலும் பிடித்து விட்டுக் கொண்டே ஆழ்ந்த பெருமூச்சொன்றை எறிந்தான்.

"இதென்ன! இப்படி உட்கார்ந்திருக்கிறீர்கள்? காப்பி ஆறிப் போகிறதே! எத்தனை தரம் சொல்வது?..." என்றாள் விஜயம்.

"உம்! என்ன சொன்னே ...?" என்று திகைப்புடன் தலையை நிமிர்த்திப் பார்த்த சோமு உடலிலிருந்து ஆறாய்ப் பெருகிய வியர்வையைத் துடைத்து விட்டுக்கொண்டே மீண்டும் கண்களை மூடியவாறே சோர்வுடன் நாற்காலியில் சாய்ந்து கொண்டான்.

"என்ன இது? ஏன் இப்படி இன்றைக்குப் பிரமை பிடித்தாற்போல் இருக்கிறீர்கள்? உடம்பு சரியில்லையா என்ன?" என்றாள் திகிலுடன் விஜயம்.

பரிதாபகரமான முகத்துடன் அவளைப் பார்த்து விழித்தான் சோமு.

"இன்றைக்கு ஆபீஸிலே ரொம்பவும் வருத்தத்தக்க விஷயம் ஒன்று நேர்ந்து விட்டது, விஜயம்! நான் முன்பு குமாஸ்தாவாக வேலை பார்த்து வந்தபோது என்னுடன் அதே ஸ்தானத்தில் வேலை செய்து வந்த என் சிநேகிதன் ஒருவன் எனக்கு மானேஜிங் டைரக்டரின் நல்லபிப்பிராயம் கிடைத்து உத்தியோக உயர்வு ஏற்பட்டது முதல் மனசிலே காரம் வைத்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டான். முன் போல் அவன் என்னிடம் இப்போதெல்லாம் பேசுவதே கிடையாது. இன்று ஆபீஸ்கணக்குகளில் நேர்ந்துள்ள சில தவறுகளைக் கண்டு பிடித்து அதற்குக் காரணம் தான்தான் என் பதை எப்படியோ தக்க சாட்சியங்களுடன் நிரூபித்து விட்டான். மானேஜிங் டைரக்டருக்கு என் மேலிருந்த நல்லபிப்பிராயத்தினால் வேலைக்கு ஒன்றும் ஆபத்து நேரவில்லை. ஆனால் என்னுடைய தவறினால் ஆபீசுக்கு நேர்ந்த அந்த நஷ்டத்துக்கு என் சம்பளத்தில் தான் மாதா மாதம் பிடித்துக் கொண்டு ஈடு செய்யப் போகிறார்கள். என்ன கஷ்ட காலம்! அந்தத் தவறு எப்படி நேர்ந்ததென்று இன்னமும் எனக்கு விளங்க வில்லை!" என்று நாத் தழுதழுக்கக் கூறி நிறுத்தினான்.

விஜயம் திக்பிரமை பிடித்தவளாய்ச் சிறிது நேரம் நின்று கொண்டிருந்தாள். "உங்களுக்கு இப்போது கொஞ்சம் போதாத காலம் போலிருக்கு!... உங்கள் கால பலன் நன்றாயிருந்திருக்காது. இல்லா விட்டால் இப்படி ஒரு நஷ்டம் நமக்கு நேருவானேன்?" என்றாள் அவள்.

"இல்லை விஜயம்!... நீ புக்ககம் வந்த வேளைதான் இந்த மன வருத்தத்துக்குக்

மார்ச் மாதம் 21ந்தேதி சிவகாசியில் தீப்பெட்டி உற்பத்தியாளர்கள் சங்கத்தாரால் மேன்மை தங்கிய கவர்னர் ஸ்ரீ ஸ்ரீபிரகாசா அவர்களுக்கு ஓர் விருந்தளிக்கப்பட்டது. விருந்துக்குப் பின் பேசிய கவர்னர் அவர்கள் தென்னிந்தியாவில் தீப்பெட்டி குடிசைத் தொழிலாளர்களுக்குத் தம்முடைய நல்லாசிகளைக் கூறினார்.

காரணம் என்று நான் நினைக்கிறேன். பாரேன்? நீ வந்து நாலைந்து மாசம் கூட ஆகவில்லை. அதற்குள் இத்தனை துர் அதிர்ஷ்டங்களெல்லாம் நமக்கு நேர்ந்திருக்கே...!'' என்றான் சோமு.

''போதும் நிறுத்துங்கள்!... மெல்லப் பழியை என் மேலே தள்ளப் பார்க்கிறீர்களா! உங்களுக்குத்தான் இப்போது வேலை நன்றாயிருந்திருக்காது. இதெல்லாம் நேர்ந்திருக்கு. இதற்குக் காரணகர்த்தாவாக நான் எப்படி ஆக முடியும்? அர்த்தமில்லாத பேச்சு!...'' என்றாள் விஜயம் எரிச்சலுடன்.

'சடா' ரென்று புன்னகை புரிந்தவாறே நாற்காலியிலிருந்து நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டான் சோமு! ''விஜயம்!... இந்த வார்த்தைகள் உன் வாயிலிருந்து வரும் என்று எதிர் பார்த்துத்தான், உன்னைச் சோதிக்கத் தான் இப்படி ஒரு விஷயத்தைச் சொல்லி ஒரு நாடகம் நடித்தேன், காரியாலயத்தில் ஏதோ நான் தவறு செய்து சம்பளத்தில் பணம் பிடித்துக் கொள்ளுகிறார்கள் என்று நான் கூறியது அவ்வளவும் கற்பனை. உன் மனசு இப்போது நன்றாகப் புரிந்து விட்டது எனக்கு! உன் கணவனுக்கு நல்லது எதுவும் வந்தால் அது நீ கால் வைத்த ராசியின் மகிமை! துயரம் ஏதேனும் ஏற்பட்டால் அது அவனுடைய ராசி பலனின் விளைவு! அப்படித் தானே? ஆனால் உன்மேல் தவறில்லை. வாழ்வின் மேன்மையில் பங்கு பெற முன் வந்து, தாழ்வின் போது தன்மேல் தவறில்லை என்ற விதமாகப் பழியைக் கழித்துக் கொள்ள ஒதுங்கும் மனப்பான்மை எல்லா மனிதர்களிடமும் தான் குடி கொண்டிருக்கிறது. எனக்கு வேலை உயர்வு ஏற்பட்டது குறித்து மானேஜர் என் உண்மையான உழைப்புத்தான் அதற்குக் காரணம் என்றார். நீ உன் கால் வைத்த ராசியின் பலன் என்றாய். அம்மா என் பரணி நட்சத்திரம் என்றாள். இதில் எதுவுமில்லை அதற்குக் காரணம். அதோ அவருடைய கடாட்சம் தான் எல்லாம். அதை நன்மை வரும் காலத்தில் நாம் எல்லோரும் மறந்து விடுகிறோம்'' என்றான் உணர்ச்சிப் பெருக்குடன் சுவரில் மாட்டப்பட்டிருந்த இறைவனின் திரு உருவப்படமொன்றைச் சுட்டிக் காட்டியவாறே.

விஜயத்தின் சிரம் வெட்கத்தினால் தானே கவிழ்ந்து கொண்டது. சுவாமி படத்துக் கெதிரில் சென்று நின்று கரம் குவித்தாள் அவள். தன் குற்றமுணர்ந்து அவருடைய அருளை மறந்து தான் செய்த அபசாரத்தை நினைத்து வருந்தி மன்னிப்புக்கோரும் உண்மை ஒளி அவள் கண்களினின்றும் கசிந்த கண்ணீரில் பிரதிபலித்தது.

## புதிய பஞ்சாங்கங்கள்

ஆனந்த போதினி திருக்கணித பஞ்சாங்கம்: கணித்தவர்: எல். எஸ். வாசன், பி. ஏ., பிரசுரம்: ஆனந்தபோதினி பிரஸ், 6, வாயர் சின்னத் தம்பி முதலி தெரு, சென்னை-1 ; விலை: அணா 8.

பாரத் கணித பஞ்சாங்கம்: கணித்தவர்கள்: புரொபஸர் எல். வி. எஸ். மணி, ஜோதிஷ பானு பண்டிட் ஈ. எஸ். கே. சுவாமி; கிடைக்கும் இடம்: பிரஹத் ஜோதிஷ நிலையம், 71 அக்ரஹாரம், புரசைவாக்கம், சென்னை-7; விலை: அணா 6.

ஜய வருஷ திருக்கணித பஞ்சாங்கம்: கணித்தவர்: யாழ்ப்பாணம் மட்டுவில், சி. சுப்ரமணிய ஐயர். ''தில்லைவாசம்,'' மட்டுவில், சாவகச்சேரி; விலை: ரூபாய் 1-25.

சுதேச மித்திரன் பஞ்சாங்கம்: கணித்தவர்: கே. எஸ். ராமமூர்த்தி சர்மா; பிரசுரம்: சுதேசமித்திரன், சென்னை-2; விலை அணா 4.

ஆகாசக்

# கோட்டைகள்

கட்டாதீர் ...





வீட்டிலொரு

# காஸல்ஸ்

விசிறி

பொருத்துங்கள்!

**காஸல்ஸ், ஆனந்த், லக்கி & ஆஸாத் விசிறிகள்**

**மாட்ச்வெல் எலக்ட்ரிகல்ஸ் (இந்தியா) லிட்.**

தபால்பெட்டி 1430, டில்லி.




KX- 59TM

தென் இந்தியாவுக்குப் பூரண விற்பனை ஏஜண்டுகள் :

**கார்டன் வுட்ராப் அண்டு கோ. (மதராஸ்) லிமிடெட்**

தபால் பெட்டி நெ. 42, சென்னை-1 - டெலிபோன்: 2978 (3 லைன்கள்)

# வீரவாள்

ஐப்பசி மாதம் கிருஷ்ண பட்சத்து நவமி அன்று, தொன்று தொட்ட காலமாக பாஜூ ஸாஹப்பின் வீட்டில் ஆயுத பூஜை நடந்து வருகிறது. இன்று கூட அவர் அந்த வழக்கத்தை அந்தரங்க சுத்தியுடனும் அபார பக்தி சிரத்தையுடனும் கொண்டாடுகிறார். அவருடைய ஆயுத சாலையில் எல்லாம் சேர்த்தால் இருநூறு இருநூற்றைம்பது ஆயுதங்களுக்குக் குறையாமல் இருக்கலாம்.

அன்று ஆயுதபூஜை. பாஜூ ஸாஹப் தம் கையினாலேயே ஒவ்வொரு ஆயுதமாக எடுத்துத் தூசி துப்பட்டைகளைத் தட்டிச் சுத்தம் செய்தார்; துருவை அகற்றினார். சிலவற்றைப் பளபளவென்று நன்றாகக் கூர் தீட்டினார். தமது குலப்பெருமைக்குக் காரணபூதரான மூல புருஷரின் வாளைக் கையில் எடுத்த பொழுது, அவரையறியாமலே அவருடைய தலை பக்தி சிரத்தையுடன் ஒரு முறை வணங்கியது. வாளின் தங்கப்பிடி, பளபளவென்று பிரகாசிக்கும் கூரிய முனை, வெகு அழகாக வளைந்திருந்த அதன் உருவம் ஆகியவற்றைப் பார்த்ததும் பாஜூ ஸாஹப்பின் ஆத்மா தமது முன்னோர்களின் மாசற்ற மங்காப் புகழிலே மயங்கி மனம் பூரித்தது. சிரத்தையின் சுமை தாங்காமல் நீர் உகுக்கும் நேத்திரங்களால் இமை கொட்டாமல் சில நிமிஷங்கள் அந்த வீரவாளை வைத்தகண் வைத்தபடியே பார்த்துக் கொண்டிருந்தார்.

முன்னூறு ஆண்டுகளுக்கு முன்னால் இதே வாளின் வீரத்தையும் பலத்தையும் கொண்டு குலகர்ணிகள் 'ஸர்தேஸாய்' அதாவது தேசத்தைக் காப்பவர்கள் என்னும் பெருமையையும் பட்டத்தையும் பெற்றுத் தங்கள் கௌரவத்தை உயர்த்திக் கொண்டிருந்தார்கள். இதே வாளின் பலத்தைக் கொண்டுதான் ஸர்தேஸாய்களின் வம்சத்துக்கு முதல்வரான வீரர், கோமாந்தக பிரதேசத்தில் உள்ள பதகிராமம் என்னும் படுகையை இனும் பூமியாகப் பெற்றார். இன்று பாஜூ ஸாஹப்பின் ஆபத்து — சம்பத்து, பெருமை—சிறுமை, உதார குணம்—ஊதாரித்தனம் எல்லாவற்றுக்கும் முக்கிய காரணமாக இந்தவீரம்பொருந்திய வாளும், இவ்வீர வாளைத்தாங்கிய கைகளையுடைய குடும்பத்துக்கு முதல்வரும் தான் இருந்தார்கள். அக்குடும்பத்துக்கு அழியாக் கீர்த்தியை அளித்த வாளையும் அந்த வாளேந்திய வீரரையும் மறக்கமுடியுமா? அந்த வாளின் பலத்தைக் கொண்டுதானே அவர் எதிரிகளின் மானத்தை வாங்கியிருந்தார்? அதே வாள் தானே அவருடைய குடி படைகளுக்கு அபயம் அளித்து ஆதரவாயிருந்து ரக்ஷித்தும் வந்தது!

இந்த வம்சத்தின் உதார குணத்தைப் பற்றிப் பல கதைகள் வழங்கி வருகின்றன. ஒரு தடவை கிராமங்களில் எல்லாம் பஞ்சப் பேய் தலை விரித்தாடியதாம். அப்பொழுது ஸர்தேஸாய்களின் இந்தக் குடும்பம்தான் எழுநூறு மூட்டை அரிசி வழங்கி ஏறக்குறைய இரண்டு மாதம் வரை பசியால் வாடிய மக்களைப் பிராணன் போகாமல் போஷித்து வந்ததாம். அதனால் இன்று கூட ஸர்தேஸாய் குடும்பத்தைச் சேர்ந்தவர்களில் யாரையாவது கண்டு விட்டால் மக்களின் கண்களில் சிரத்தையும் பக்தியும் பெருக்கெடுத்து ஓடத் தொடங்கி விடுகின்றன! கைகள் தாமாகவே கூப்பி வணக்கம் தெரிவிக்கத் தொடங்கி விடுகின்றன. இருதயத்தின் ஆழத்தி லிருந்து 'வணக்கம்' என்னும் சொல் எழுந்து வாய் வழியே வெளி வந்து விடுகின்றது.

வாளுக்கு வணக்கம் செய்யும் பொழுது பாஜூ ஸாஹப்பின் உள்ளத் திரையிலே முன்னோர்களின் மதிப்பும் மரியாதையுமே உருவான வடிவங்கள் உயிர் பெற்று நின்று விட்டன. பளிச்சென ஒளி வீசும் அவரது விழிகளின் ஓரத்திலிருந்து கண்ணீர்த் துளிகள் முத்து முத்தாகத் திரண்டு வாளின் தங்கப் பிடி மீது 'டப், டப்' என்று விழுந்தன.





இருபத்தைந்து தலை முறைகளாக இந்த ஆயுத பூஜை அவருடைய வம்சத்திலே நடந்து வருகிறது. இன்று பாஜூ ஸாஹப்பின் விழித் திரையிலே அந்த இருபத்தைந்து மகா பராக்கிரம சாலிகளான முன்னோர்களும் உருப் பெற்று நின்றனர். ஆகா! அவர்கள் தான் எப்படிப்பட்டவர்கள்! லவலேசங்கூடக் களங்கமே இடையாதவர்கள். ஐச்வரியத்தின் மடியிலே தன்னிச்சையாக விளையாடியவர்களாயிருந்த பொழுதிலும், தான்தோன்றித்தனமான காரியங்களில் இறங்கியவர்கள் அல்ல; ஈடுபட வேண்டும் என்று எண்ணியவர்களும் அல்ல. சூர-வீரத்தின் சின்னமாக இருந்த பொழுதிலும் கர்வம் கடுகுகூட அவர்களை ஆட் கொண்டதில்லை. பிறரைத் துன்புறுத்தும் பேய்க் குணம் அவர்களுக்கு உண்டானதில்லை. குற்றங் குறைகளின்றி, மாசு-மறுவின்றி வாழ்ந்தவர்கள் அவர்கள்.

ஆனால் இன்று குடும்பத்தின் அந்தக் கௌரவமும் பெருமையும் மண்ணோடு மண்ணாகி விடுமோ என்ற கவலை ஏற்பட்டிருந்தது. ஸர்தேஸாய் வம்சத்தின் ரத்னத்துக் கொப்பான பரிசுத்த வாழ்க்கையின் பெருமை, நெறியிழந்த பயங்கரப் படுகுழிகள் நிறைந்த பேய்க் குகைக்குள் மறைந்து இருந்த இடம் தெரியாமல் அடியோடு அழிந்து விடுமோ என்று எண்ணக் கூடிய நிலைமைக்கு வந்து விட்டது. பாஜூ ஸாஹப்பின் அந்தரங்க ஆத்மாவுக்கு எதிரே அவருடைய கனிஷ்ட புத்திரனான நானுவின் துர் நடத்தைகள் தன் இச்சையாக நிர்வாண நடனம் ஆடிக் கொண்டிருந்தன.

நானு பாஜூ ஸாஹப்பின் கடைசிப் பிள்ளை. எல்லோருக்கும் இளையவன். தாயார் அவனைப் பெற்றதும் பரலோகத்தை நோக்கிப் பிரயாணமாகி விட்டாள். இயல்பாகவே பாஜூ ஸாஹப் தமது அன்பு முழுவதையுமே தமது அந்த இளைய புதல்வன் மீது அள்ளிச் சொரிந்திருந்தார். பழைய காலத்து வழக்கப்படி அவர் தமது நான்கு புதல்வர்களில் ஒருவனைக் கூடத் தம் மடியில் எடுத்துக் கொண்டு கொஞ்சி விளையாடியதில்லை. ஆனால் நானுவின் விஷயத்தில் அவர் வேண்டுமென்றே அந்தப் பழைய வழக்கத்தை மீறி விட்டார். தாயில்லாக் குழந்தையல்லவா?

வாள் வீச்சு, குறி பார்த்துத் துப்பாக்கி சுடுவது முதலிய எல்லாவற்றையும் அவரே அவனுக்குக் கற்றுக் கொடுத்தார். அநேகந் தடவை குழந்தை நானுவையும் கூடவே கூட்டிக் கொண்டு போய், விழித்திருக்கும் புலியை வேண்டுமென்றே வேட்டினால் எழுப்பிப் பிறகு அதைக் கொன்றிருக்கிறார். தம் குடும்பத்தில் வாழையடி வாழையாக வந்த வீரம் அவனிடத்தில் தானாகவே வர வேண்டும் என்பது அவருடைய அந்தரங்க ஆசை. அதனால்தான் அவர் அவ்வாறெல்லாம் செய்தார். ஆனால்...... ஆனால் பரம்பரை வீரமும் ஆண்மையும் வேரூன்றுவதற்குப் பதிலாக நானுவிடம் பல பயங்கரச் செயல்கள் குடி கொண்டன. அவன் ஹிம்ஸையே உருவான மனித மிருகமாக மாறி விட்டான். இப்பேர்ப்பட்ட மட்டமான மனிதனை இந்த மானிட உலகத்திலேயே பார்க்க முடியாது என்று கூறும்படி குலத்தைக் கெடுக்க வந்த கோடாரிக் காம்பாக அவன் உருமாறி விட்டான்.

பாஜூ ஸாஹப்புக்கு ஏற்பட்ட வருத்தத்துக்கு ஓர் எல்லையில்லை. விதையொன்று போடச் சுரை ஒன்று எப்படி முளைத்தது என்று அவருக்கே புரியவில்லை. பாஜூ ஸாஹப்பின் வேதனையும் கண்ணீரும் உணர்ச்சி வசப்பட்ட ஒரு மனிதனின் ஆத்திரத்தையோ ஆவேசத்தையோ சேர்ந்தவையல்ல. அவருடைய கர்ஜனையைக் கேட்டுக் காட்டுக்கு அதிபதியான சிங்க ராஜனின் இருதயமே படபட வென்று அடித்துக் கொள்ள வேண்டும், நடு நடுங்கிச் செத்து விட வேண்டும் என்றால் அதிகம் கூறுவானேன்?— அவ்வளவு சக்தி வாய்ந்த அவர் வேதனையே உருவாகக் கண்ணீரைச் சிந்திக் கொண்டிருந்தார்.

ஒரு தடவை பாலு ஸாஹப் 'கார்வே'த் திருவிழா ஒன்றுக்குப் போயிருந்தாராம். அங்கே ஒரு பரங்கியச் சிப்பாய் ஸ்நானம் செய்ய வந்திருந்த ஒரு ஹிந்துப் பெண்மணியை அவமானப் படுத்தினானாம். இச்செய்தி பாலு ஸாஹப்பின் காதுகள் வரை எட்டவே, கோபத்தினால் கொதித்தெழுந்து சம்பவம் நிகழ்ந்த இடத்துக்குச் சென்றாராம். அந்தப் பரங்கியனின் கழுத்தைப் பிடித்து ஒரு அழுத்து அழுத்தினாராம். அப்படியே அவன் விழிகள் பிதுங்கி வெளியே வந்தனவாம்.

அப்படிப்பட்ட புஜ பல பராக்கிரமம் பொருந்திய பாலு ஸாஹப்தான் இன்று தம் சின்னப் பிள்ளையின் செயலைக் கண்டு கேட்டுக் கதிகலங்கிக் கொண்டிருந்தார். தினந் தினம் காது கொண்டு கேட்க முடியாத பல செய்திகள் அவர் காதுக்கு எட்டிக் கொண்டிருந்தன. 'குறிப்பிட்ட குற்ற மற்ற நபரை வலுச் சண்டைக்கு இழுத்து அடித்து விட்டான். குறிப்பிட்ட 'பெண்ணை இழிவு படுத்தி விட்டான். குறிப்பிட்டவன் தனது அநுசிதமான ஆசையைப் பூர்த்தி செய்து வைக்க வில்லை என்பதற்காக அவன் குடிசையையே கொளுத்தி விட்டான். குறிப்பிட்டவன் தன் வயது வந்த தங்கையையோ மகளையோ அவனுடைய மிருக இச்சையைப் பூர்த்தி செய்து கொள்ள உடன் படும்படி செய்யவில்லை என்பதற்காகக் குத்துச் சண்டை பழிச் சண்டை வரை கொண்டு வந்து விட்டான்.'—இது போன்ற எத்தனை எத்தனையோ செய்திகள், காது கொடுத்துக் கேட்க வேண்டாம் என்று எண்ணினால் கூட பாலு ஸாஹப்பின் காதில் வந்து விழுந்து கொண்டிருந்தன.

பாலு ஸாஹப் உள்ளத்தில் போராட்டம் நிறைந்திருக்க அன்று ஆயுத பூஜையை எப்படியோ காமாசோமா வென்று ஒருவாறு முடித்தார். பிறகு மூலையில் கட்டியிருந்த கொழுத்த ஆட்டின் கழுத்தில் பூமாலையைப் போட்டார். நெற்றியில் குங்குமமிட்டார். அடுத்த கணம் ஒரே வீச்சில் அதன் தலை உடலிலிருந்து உருண்டது. ஆயுத தேவதைக்குப் பலி கொடுத்து முடிந்தது; அதன் ரத்த தாகம் தீர்க்கப் பட்டது.

அன்று மாலை கோவிலில் ஒரே கொண்டாட்டம். வாத்தியங்கள் பல முழங்கின. மக்கள் சாரி சாரியாகச் சென்று கோவிலில் கூடினர். பாலு ஸாஹப் மாலைப் பூஜையை முடித்துக் கொண்டார். மக்கள் அனைவரும் அவருடன் கோயிலை வலம் வந்தார்கள்.

ஆலய வழிபாட்டை முடித்துக் கொண்டு அவர் தமது வீட்டு வாசலை மிதித்த போது தமக்கு முன்னாலேயே பத்துப் பதினைந்து பேர் கூடி நிற்கக் கண்டார். அவர்களுக்கு நடுவிலேயே ஒரு கட்டிலில் ஒரு மனிதன் ரத்த வெள்ளத்தில் தோய்ந்து சாகுந் தறுவாயில் கிடந்தான். அதைக் கண்டதும் அவர் அலறியடித்துக் கொண்டு ஒரே பாய்ச்சலில் காயமுற்ற அந்த மனிதனுக்கு அருகில் போய் நின்றார்.




ஒரு கிழவன் நடந்த நிகழ்ச்சி முழுவதையும் ஆதியோடு அந்தமாகச் சொன்னான். நானா கடுங் கோபமுற்று அவன் மண்டையைப் பிளந்திருந்தான். காரணம், பாலு ஸாஹப்பின் உத்தரவின் பேரில், தோட்டத்தில் உள்ள பழுக்காத காய்களைப் பறிக்கக் கூடாது என்று அவன் நானாவைத் தடுத்து நிறுத்தியது தான். காயமுற்றவனின் பெயர் கேசவன். அவன் பாலு ஸாஹப்பின் தோட்டக்காரன்.

இந்தச் செய்தியைக் கேட்ட பாலூ ஸாஹப் 'நறநற' வென்று பல்லைக் கடித்துக் கொண்டார். அப்பொழுது அதைத் தவிர அவர் வேறு என்ன செய்ய முடியும்?

நானுவோ அவருடைய அருமந்தப் புதல்வன். தாயில்லாப் பிள்ளை வேறு. அவனைக் கடிந்து அடக்கலாம் என்றால் அவர் மனம் கேட்க வில்லை. ஆனால் அதே சமயத்தில் அவன் செய்த தவறையும் பொறுத்துக் கொண்டிருக்க மனம் ஒப்ப வில்லை. எனவே என்ன செய்வது என்று புரியாத இரண்டுங் கெட்ட நிலையில் மனத்தைப் போட்டு அலட்டிக் கொண்டிருந்தார்.

கடைசியில் 'என்ன இருந்தாலும் அவன் சிறு குழந்தைதானே? அறியாமல் ஏதோ தவறு செய்து விட்டான். அறிவு வளர்ந்தால் தானுகச் சரியாகப் போய் விடுவான்!' என்று மனத்தைத் தேற்றிக் கொண்டார். இருந்தாலும் உள்ளூறக் குடும்ப கௌரவம் குட்டிச் சுவராகாமல் இருக்க வேண்டுமே என்ற கவலையும் அவரை வாட்டத்தான் செய்தது. இனி அவனைப் பற்றி இது போன்ற ஏதாவது அவதூறான செய்தி வந்தால் கடிந்து கொள்ளலாம் என்று தம்மைத் தாமே சமாதானப்படுத்திக் கொண்டு, மற்ற அலுவல்களில் மனத்தைச் செலுத்தினார்.

இந்தச் சம்பவம் நடந்து இரண்டு மூன்று வருடங்கள் ஓடி விட்டன. அது முதற்கொண்டு நானு வீட்டுக்கு வரவில்லை. ஆனால் தன் தீயச் செயல்களை அவன் நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகப் படுத்திக் கொண்டேயிருக்கிறான் என்னும் செய்தி மட்டும் பாலூ ஸாஹப்புக்குக் கிடைக்கத் தவறவில்லை.

மத்தியான வேளை. பாலூ ஸாஹப் சாப்பிட்டு விட்டுச் சிறிது நேரம் களைப்பாறலாம் என்று எண்ணி அப்பொழுதுதான் படுத்திருந்தார். குலவாடி வகுப்பைச் சேர்ந்த இரண்டு மூன்று பெண்களும், பத்துப் பதினைந்து ஆண்களும் குய்யோ முறையோ என்று கூச்சலிட்டுக் கொண்டு பாலூ ஸாஹப்பின் வீட்டு வாசலை அடைந்து விட்டனர். பாலூ ஸாஹப் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தார். நிலைமை யிருந்த மோசத்தை உணர்ந்த அவர் அசந்து போய் விட்டார். மூன்று பெண்களில் ஒருத்தி யுவதி. அவள் அடிக்கடி பைத்தியக்காரியைப் போலத் தன் தலை மயிரைப் பிய்த்து எடுத்துக் கொண்டிருந்தாள். வயிற்றிலும் மார்பிலும் அடித்து அலறிக் கொண்டிருந்தாள். அவளுடைய தலை மயிர் பறந்து அலங்கோலமாகக் கிடந்தது. அணிந்திருந்த ஆடை தாறுமாறுகக் கிடந்தது. முகம் முழுவதும் கண்ணீர்க் கறை படிந்திருந்தது. புடவை ஏகமாகக் கிழிந்து கிடக்கவே, உடலைக்கூட சரிவர மூடிக் கொள்ள முடியாத நிலையில் அவள் இருந்தாள். பாலூ ஸாஹப்புக்கு இருந்த நிலையைப் புரிந்து கொள்ள அதிக நேரம் பிடிக்க வில்லை. தேஜஸே உருவான அவருடைய முகம் வெட்கத்தினால் களையிழந்து வாடி விட்டது. அவர் ஓடோடி வெளியே வந்தார். பயந்து போய் ஜனங்கள் அவருக்கு வழி விட்டனர். அவரை அருகில் பார்த்ததும் அந்தப் பெண் கதறியே விட்டாள், "சுவாமி! சுவாமி! இனி நான் எங்கே போவேன்? என்ன செய்வேன்? ஐயோ, கடவுளே!" என்று!

அந்தக் கூக்குரலில் அவமானம் தாளாத பெண்மையின் சீற்றம் தொனித்தது. கதியில்லாத அபலையின் மனத் தாங்கல் தென்பட்டது. பாலூ ஸாஹப்பின் ஆத்மா அவளுடைய அந்த நிலையைக் கண்டு கதி கலங்கியது. இருபத்தைந்து தலைமுறைகளாக ஓடிய ஸர்தேஸாய் வம்சத்தின் பெருமையே உருவான ரத்தம் கொதித்தது. அவர் அந்தப் பெண்ணின் தலையில் தமது கையை வைத்து, "குழந்தாய், கலங்காதே! கொடுமை புரிபவனுக்குத் தகுந்த தண்டனை கிடைக்கும். ஸர்தேஸாய் வம்சம் உன்னைக் காக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும்!" என்றார் சமாதானப் படுத்தும் தோரணையில்.

சாயங்கால பூஜையை முடித்துக் கொண்டு பாலூ ஸாஹப் தம் குல புருஷனின்



# கட்டுக்குள் அடங்கியது!




நிதி மந்திரி தேஷ்முக் மத்திய சர்க்காரிலிருந்து விலகி விடுவதாகச் சொன்னதை வாபஸ் வாங்கிக்கொண்டு விட்டார்.

---

தங்க விக்கிரஹத்துக்கு எதிரே மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டு கருணைப் பிச்சை கேட்டார். குழந்தையைப் போலக் கதறி அழுதார். பிறகு சலவைக்கல் மேடையில் வைத்திருந்த தமது வம்சத்தின் வீரவாளுக்குக் கண்களில் நீர் மல்க வணக்கம் தெரிவித்தார். அந்த வாளின் உருவத்தில் இருபத்தைந்து தலைமுறைகளாகத் தம் குடும்பத்தில் நடந்து வரும் பாரபட்சமற்ற தீர்ப்பு முறை உருப்பெற்று வந்து பேசுவது போலிருந்தது. அவர் உடல் முழுவதும் ரோமம் குத்திட்டு நின்றது.

வணங்கி எழுந்து நின்றார். அவர் பார்வை எதிர்ப்புறம் சென்றது. அப்பொழுது நானு அந்தப் பெண்ணின் குடிசை தேடிச் சென்று கொண்டிருந்தான். அதைக் கண்டதும் அவர் தம் சுய புத்தியை இழந்தார். சட்டென்று பூஜையிலிருந்த வாளின் கைப்பிடியைப் பிடித்துத் தூக்கிக்கொண்டார். அடுத்த நிமிஷம் மின்னல் வேகத்தில் அவ்விடத்தை விட்டு வெளியேறினார்.

நாற்புறமும் இருள் கவிந்திருந்தது. பாஹூ ஸாஹப் கையில் உருவிய வாளுடன் காற்றின் வேகத்தில் கடுகி நடந்து கொண்டிருந்தார். இருளில் அவருடைய ஒளி வீசும் விழிகள் மகா காலனின் பிரளய விழிகளைப் போலப் பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. போய்ச் சேர்ந்ததும் காலால் ஒரு உதை உதைத்து அந்தப் பெண்ணின் குடிசைக் கதவைத் திறந்து கொண்டார். ஒரு மூலையில் மங்கிய விளக்கு 'மினுக் மினுக்' கென்று பிரகாசித்துக் கொண்டிருந்தது. அங்கேயே இன்னொரு மூலையில் அந்தப் பெண் பலியாட்டைப் போல் உதறல் எடுத்த உடலுடன் நின்று கொண்டிருந்தாள். அவளுக்கு எதிர்த்தாற் போலக் காமக்கிறக்கம் தோய்ந்த கண்களுடன் வைத்த கண் வாங்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் நானு. அவருடைய ரத்தத்தினாலும் மாம்சத்தினாலும் ஆனவன் அவன். ஆனால் ஹிம்சைத் தீயே உருவாகக் காட்சி அளித்துக் கொண்டிருந்தான். அந்தக் காட்சியைத் தம் கண் கொண்டு காணச் சகிக்கவில்லை பாஹூ ஸாஹப்புக்கு.

அவர் உரத்த குரலில் குலதேவதையின் பெயரை உச்சரித்தார். வாள் பளிச்சிட்டது. அடுத்த கணம் 'விச்' சென்னும் சத்தம் வந்தது. கண் திறந்து பார்த்தால் நானுவின் தலை தரையில் உருண்டு கொண்டிருந்தது.

தீமை தோய்ந்த நானுவின் உஷ்ண ரத்தத்தை ஒரு வாய் பருகி விட்டு குல புருஷனின் வாள் ரத்த சண்டியைப் போல அட்டஹாஸச் சிரிப்புச் சிரித்தது. அதற்குப் பக்க வாத்தியம் வாசிப்பது போலப் பாஹூ ஸாஹப்பின் பயங்கரப் பேய்ச் சிரிப்பும் வேறு சேர்ந்து கொண்டது. — ஒரு மராட்டிக் கதை.

# கால்கேட்

# குளோரோபில் டூத்பவுடர்




## குளோரோபிலின் பூரண நன்மைகளை நீங்கள் உபயோகிக் கையில் தருகிறது!

## வீரிய குளோரோபில்தான் பலன் தரும்!

வீரிய குளோரோபிலின் நன்மைகளை எல்லாம் புதிய கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் தருகிறது. வீரிய குளோரோபில் தான் வாய் நாற்றம், கிரிமிகளை நீக்கி ஈறுகளைப் பலப்படுத்துகிறது. கால்கேட் முறையில் குழந்தைகளுக்கு குளோரோபில் கவனிப்பை அளியுங்கள்—அரிய சந்தர்ப்பம்.



### வாய் நாற்றத்தை அழிக்கிறது

ஒரு விசேஷ சூத்திரம் காரணமாக கால்கேட் குளோரோபில் டூத்பவுடர் துரிதமாக, திருத்தமாக வேலை செய்கிறது. உங்கள் வாய் அதிகநேரம் புதுமை, இனிமையுடன் இருக்கிறது. அதன் வாசனை ஜோரானது!

### கிருமிகளை ஒழிக்கிறது

சாப்பிட்டவுடன் கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் பற்களைச் சிதைக்கும் அமிலங்கள் ஒழிகின்றன.








### ஈறுகளை பலப்படுத்துகிறது

ஈறுகளை குளோரோபில் பலப்படுத்துகிறது. தினசரி கால்கேட் குளோரோபில் டூத் பவுடரை உபயோகிப்பதால் குளோரோபிலின் பூரண நன்மைகளைப்பெற்று ஈறுகளைப் பாது காக்கலாம்.

CTPG/I




வெய்யில் அதிகரித்தால் குடல் மந்திப்பது சகஜம். அதன் பயனாக சரீரத்தில் விஷக்கழிவுகள் சேர்ந்து, 'கன' உணர்ச்சியும் அலுப்பும் சோர்வும் உண்டாக்கும். புத்துணர்ச்சி தரக்கூடிய தளதளக்கும் ஈனோஸ் 'ப்ரூட்ஸால்ட்' சாப்பிடுங்கள். அதன் சௌமிய விரேசக குணம் எல்லா விஷக் கழிவுகளையும் வெளியேற்ற உதவி, உங்களை குளுமையாக, உற்சாகம் ததும்ப வைத்திருக்கிறது.

# ஈனோஸ்
# 'ப்ரூட் ஸால்ட்'

உங்களை தெம்பாகவும் சுருசுருப்பாகவும் வைத்திருக்கிறது

புதுமை கெடாமலிருக்க புட்டிகளில் விற்கப்படுகிறது.

'ஈனோ' மற்றும் 'ப்ரூட்ஸால்ட்' என்ற பதங்கள் ரிஜிஸ்டர் செய்யப்பட்ட டிரேட் மார்க்குகள்






தெருவோடு போய்க் கொண்டிருந்த என்னைக் கையைத் தட்டிக் கூப்பிட்டார் கிழவர். முன்பின் அறிமுகம் இல்லாத அவர் என்னைக் கூப்பிடுவது எனக்குத் திகைப்பை அளித்தாலும் நான் அதை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளாமல் அவரை நோக்கி நடந்தேன்.

தாத்தாவாக நினைத்துக் கொள்வதாகச் சொன்னதும் அவர் ஒருமையில் கூப்பிட ஆரம்பித்து விட்டதை நான் உணர்ந்தேன். ஆனால் கோபப்படவில்லை. "எனக்குத் திருவாரூர். நான் பத்மநாப அய்யர் பிள்ளை" என்றேன்.

"ஓ, பத்மநாப அய்யர் பிள்ளையா நீ! காசில்காராக இங்க ஊரிலே இருக்காரே.

"வயசாகிறதோ, இல்லையோ? அதனால் ரொம்ப நாழி பேசினால் 'படபட' வென்று வருகிறது. உன் நேரத்தையும் வீணாக அடிக்க விருப்பம் இல்லை. சொல்ல வந்ததைச் சீக்கிரம் சொல்லிவிடுகிறேன். கேட்டுக் கொள்."

"............"

"அந்த வாத்தியார் குட்டி கோமளமா, மங்களமா? அவளை நீ கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாயாமே! அதுவும் கோவிலிலே தாலி கட்டி அழைத்துக் கொள்ளப் போகிறாயாமே! குலம், கோத்திரம் அவ்வளவுக்கும் உலை வைத்து விட்டாயே!"

எனக்குக் கொஞ்சம் கோபம் வந்தது. ஆனால் நிதானம் வாழ்க்கைக்கு ரொம்பவும் அவசியமானது என்ற காரணத்தால் நான் எப்போதும் பொறுமையை இழப்பதே இல்லை. "ஆமாம், அவளுக்கு ஆடம்பரம் பிடிக்காது. எனக்கும் அப்படித்தான். அதனால் தான் இப்படி முடிவு செய்தோம்" என்றேன்.

துள்ளிக் குதித்தார் கிழவர். "வெளியில் கீரிப்பிள்ளை உலாவுகிறது என்றால் பெட்டியில் இருக்கும் நாகப் பாம்பு வெளியில் வருவதில்லை. வெளிப்படையாகக் கல்யாணப் பேச்சு பரவினால் அவள் குட்டு வெளிப்பட்டு விடும் என்று பயப்பட்டு உன்னை அப்படி மடக்கி இருக்கிறாள். பலே கைகாரியாயிற்றே அவள்!..." என்றார்.

நான் குறுக்கிட்டேன். "சொல்வதை விளக்கமாகச் சொல்லுங்களேன். புதிர் போட்டால் எப்படிப் புரிந்து கொள்வதாம்?" என்று கேட்டேன்.

அவர் சொன்னார்: "கோமளத்துக்கு ஏற்கெனவே கல்யாணம் ஆகிவிட்டது. ஏதோ தம்பதிகளுக்குள் சில சச்சரவு காரணமாக அவளை வாழா வெட்டியாக அடித்து விட்டான் அவன். அது முதல் இந்த ஊரில் வாத்தியாரம்மாவாக உத்தியோகம் பார்க்க வந்து விட்டாள். அடேயப்பா! அவள் குலுக்கும் தளுக்கும்! இந்த ஊரிலே இருக்கிற பசங்களோடெல்லாம் சவுடால் அடிப்பாள் அவள். எவ்வளவோ கட்டுப்பாடாக அவளை வைத்திருந்தோம். நீ என்னடா என்றால் பரபரவென்று கல்யாணம் செய்து கொள்ளத் துணிந்து விட்டாயே!"

நான் பதில் பேசவில்லை. ஏமாற்றத்தால் என் இருதயம் சுமையாகக் கனத்தது. அதற்கு மேல் அங்கிருக்கப் பிடிக்காமல் நான் தங்கியிருந்த வீட்டை நோக்கி நடந்தேன்.

நான் வீட்டை அடைந்த போது அவள் தன் வீட்டு வாசற்படியில் நின்றிருந்தாள். "ரொம்ப நேரம் ஆகும் என்றீர்களே! அதற்குள் என் ஞாபகம் வந்து விட்டதாக்கும். அடேயப்பா! இந்த ஆண்களுக்குத்தான் எவ்வளவு பதற்றம்! எண்ணம் என்று ஒன்று ஏற்பட்டு விட்டால் அது நிறைவேறும்



வரை அவர்களால் தாங்கவே முடிகிற தில்லே'' என்றாள் அவள்.

நான் அவளை எரித்து விடுவதைப் போலப் பார்த்தேன். அவளைச் சிறிதும் சட்டை செய்யாமல் பரக்கப் பரக்க உள்ளே நுழைந்தேன். என் உள்ளம் முணுமுணுத்தது. ''சீச்சி! வெட்கம் மானம் என்பது கொஞ்சங்கூடக் கிடையாதோ இவளுக்கு......?''

*   *   *

சின்னஞ்சிறு வயதிலேயே தந்தையை இழந்தவன் நான். அம்மா அவள் தம்பியையும் தமையனையும் கெஞ்சி என்னைப் படிக்க வைத்தாள். ஆனால் என் படிப்பு முடிவதற்குள் அவளும் இறந்து விடவே நான் ஒண்டிக் கட்டையாகி விட்டேன்.

சாப்பிடக் கூப்பிடவோ, சாப்பிடா விட்டால் காரணம் கேட்கவோ எனக்கு யாரும் நாதி இல்லை. பந்தம், பாசம், உறவு எல்லாம் எனக்கு நானே தான்.

தெய்வ கதியாக எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்ததும் ஸர்விஸ் கமிஷன் பரீட்சையிலும் தேர்ச்சி கிடைக்கவே தாலுக்கா ஆபீஸ் குமாஸ்தாவாகச் சேர்ந்து மெள்ள மெள்ள ரெவின்யூ இன்ஸ்பெக்டர் பதவிக்கு வந்தேன். இதன் விளைவாக இத்தனை நாட்களாக ஏற்படாத மணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசை திடீரென்று ஏற்பட ஆரம்பித்தது. உப்பு சப்பற்ற என் வாழ்க்கை கொஞ்சமாவது வனப்பு அடைய வேண்டுமானால் எனக்கு ஒரு மனைவி தேவை என்பதை உணர்ந்தேன்.

எனக்கு ரெவின்யூ இன்ஸ்பெக்டர் பதவி கிடைத்ததும் முதல் ஜமாபந்திக்காக அந்த ஊர் செல்ல நேர்ந்தது. அந்த ஊர் முன்சீப் நான் தங்குவதற்கு ஒரு வீட்டையே அமர்த்திக் கொடுத்திருந்தார், சகல வசதிகளுடன். அங்கேயே தங்கினேன்.

கோமளம் அந்த வீட்டுக்கு எதிர் வீட்டில் வசித்து வந்தாள். முதல் நாள் நான் கிளம்பும் போது அவளும் வீட்டை விட்டுக் கிளம்பினாள். நான் அவளை வெறிக்க வெறிக்கப் பார்த்தேன். நெற்றியில் அழகான திலகம், வாரி முடிந்த கூந்தல், முகத்தின் களையை வெளிப் படுத்திக் காட்டும் வகையில் மூக்குப் பொட்டு. எனக்கு ஒரு பெண்ணைப் பார்ப்பதாகவே தோன்ற வில்லை. தேவியைத் தரிசனம் செய்வது போலவே இருந்தது.

அவளும் சட்டென்று நின்று விட்டாள். அவள் கண்கள் என் கண்களோடு உறவாடின. கண்களோடு கண்கள் பேசினால் அவை இன்னதைத்தான் பேச மென்று வரையறை உண்டா, என்ன?

சந்தர்ப்பம் எங்களுக்குத் துணை செய்தது. அன்றைக்கு மறு நாள் நானும் அவளும் மனம் விட்டுப் பேசிக் கொண்டோம். அவளும் அனாதைதான் என்பதை அறிய எனக்கு ஆனந்தமா யிருந்தது. பிச்சைக்காரனுக்கு

அவனைப் போலவே பசியால் வாடும் மற்றொருவனைப் பார்க்கும் போது எவ்வளவு ஆனந்தமும், சாந்தியும் ஏற்படுகிறது!

ஆர்ப்பாட்டம் இல்லாமல் கோவிலில் மணம் செய்து கொள்வதாக முடிவு செய்தோம். அந்த மாதம் மார்கழி மாதமாக இருக்கவே, தை மாதத்தை எதிர் நோக்கிக் காத்துக் கிடந்தோம் நாங்கள்.

இன்ப அலைகள் மோத வெற்றிக் கனவுகள் கண்டு கொண்டிருந்த என் தலையைச் சம்மட்டி கொண்டு அடித்து விட்டாரே கிழவர்!

*　　　*　　　*

என் கோமளம் சுயகலக்காரி! என்னால் இதை நம்ப முடியவில்லை. தூக்கம் பிடிக்காமல் படுக்கையில் புரண்டு புரண்டு தவித்த நான் இரவோடு இரவாக அவளுக்கு ஒரு கடிதம் எழுதினேன்.

**கோமளம்!**

**நீ கல்யாணம் ஆனவளாமே! என்னுடைய நிர்மலமான நெஞ்சில் விகல்பத்தைப் புகுத்தி எவ்வளவு சிதற அடித்து விட்டாய் நீ! பல பேருக்குப் பாடம் சொல்லித் தரும் உனக்கு உண்மை எப்படியும் ஒரு நாள் வெளியாகிவிடும் என்பது ஏன் தெரியாமல் போயிற்று?**

**'நான் கல்யாணம் ஆனவள். ஆனால் கணவனுடன் வாழ்க்கை நடத்தவில்லை. வேறு யாரையாவது மணக்க விரும்புகிறேன்' என்று சொல்லியிருந்தால்கூட நான் சரி என்று சொல்லியிருப்பேனே! அவ்வளவு தூரம் உன் அழகாலும், அடக்கத்தாலும் என்னைக் கொள்ளை கொண்டிருந்தாய் நீ.**

**என்னுடைய இதயக் குமுறலின் அளவை நீ கணிக்க முடியாது. ஆனால் நீ இந்தப் பாபத்தின் விளைவை ஒருநாள் அனுபவித்தே தீருவாய்.........''**

சந்திரனை விளையாடக் கேட்டு முரண் பிடிக்கும் குழந்தை கண்ணாடியில் சந்திரனின் பிரதிபிம்பத்தைக் கண்டு ஆறுதல் அடைவதைப் போல நானும் இதை எழுதிய பிறகு கொஞ்சம் ஆறுதல் அடைந்தேன். ஆனால், நெருப்பு என்று சொன்னால் மாத்திரம் வாயோ கறியோ வேகுவது இல்லை அல்லவா?

*　　　*　　　*

கடமையைச் செய்வதில் கால தேவனை யாரும், எப்பொழுதும் மிஞ்சிவிட முடியாது. கோமளத்தை வெகு விரைவில் நான் நிரஸ்கரித்து விட்டேன் என்றாலும் அவளை என்னால் மறக்கவே இயலவில்லை. நான் நினைத்திருந்தால் வேறு யாராவது ஒரு பெண்ணை மணந்து கொண்டிருக்கலாம். ஆனால் என்னால் அதுதான் முடியவில்லை.

கோமளம் எனக்கு இரண்டொரு கடிதங்கள் எழுதினாள். ஒவ்வொன்றிலும் அவள் தான் ஏதோ சொல்ல விரும்புவதாகவும் கடிதம் மூலம் தெரிவிக்க முடியாத செய்தி ஆனதால் என்னை ஒரு முறை சந்திக்க அநுமதிக்கும் படியும் கெஞ்சினாள்.

அவள் கடிதம் எனக்குக் கேலியாக இருந்தது. யாராவது தேளுக்கு ஒருதரம் கொட்டி விட்டுப் போகட்டும் என்று கருணை காண்பித்து அநுமதி அளிப்பார்களா?

அடுத்த ஜமாபந்திக்குள் அந்த வட்டாரத்தை விட்டே மாறிவிட வேண்டும் என்று பகீரதப் பிரயத்தனம் செய்தேன். ஆனால் இந்த முயற்சியில் எனக்குத் தோல்விதான் கிடைத்தது. ஜமாபந்தி சமயமும் வந்து கோமளத்தின் ஊருக்குப் போக வேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்பட்டது.

பொறுக்குத் தட்டிய புண்ணில் மெல்லிய நூல் இழை உராய்ந்தால் கூட ரத்தம் கசியத் துவங்கும் அல்லவா? நான் எவ்வளவோ தூரம் முயன்று மறக்க நினைத்த அவள் நினைவை மறுபடியும் தூண்டிக் கொடுக்கும் வகையில் சம்பவங்கள் ஏற்பட்டன.

*　　　*　　　*

இந்தத் தடவை நான் அந்த வீட்டில் தங்கவில்லை. ஊருக்கு ஐந்தாறு மைல்களுக்கு அப்பால் இருந்த மற்றொரு கிராமத்தில் தங்கினேன். ஜமாபந்தியெல்லாம் ஒரு வழியாக முடிந்து ஊர் திரும்ப வேண்டிய நாள் வந்தபோது என் மனம் அமைதி பெற ஆரம்பித்தது.

இரவு பத்து மணி இருக்கும். கடைசியாகப் போட வேண்டிய கையெழுத்துக்களைப் போட்டுக் கொண்டிருந்தேன். நிலக் கடலை எனக்கு நிரம்பப் பிடிக்கும் என்பதை எப்படியோ அறிந்திருந்த முன்சீப் நல்ல முற்றிய பருப்பாகத் தேர்ந்தெடுத்து வறுத்து அனுப்பியிருந்தார். கடலைகளைக் கொறித்தபடி உட்கார்ந்திருந்தேன்.

கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. எனக்கு எரிச்சலாக இருந்தது. உபசாரம் என்றாலும் அதற்கு ஒரு வரையறை இல்லையா? மோரைச் சாப்பிடுங்கள், பாலைச் சாப்பிடுங்கள் என்று தொந்தரவு செய்து கொண்டே இருந்தால், அரை நாழிகை நிம்மதியாக உட்கார்ந்து ஒருவன் எப்படி வேலை செய்ய முடியும்?

வாசல் கதவைத் திறந்த எனக்கு ஆச்சர்யம் காத்துக் கிடந்தது.

கோமளம் நின்று கொண்டிருந்தாள்!

சகல மொழிகளையும் பேசும் அவள் கண்களில்தான் எவ்வளவு ஏக்கம்! பள பளவென்று மின்னும் கட்டோடு கூடிய அவள் தேகத்தில் தான் எவ்வளவு வறட்சி! அவளுடைய கிளி கொஞ்சும் செவ்விதழில் ஈரப் பசையையே காணோமே......

வாய் விட்டுக் கதறி அழுது ஆறுதல் அடைய வேண்டும்போல இருந்தது எனக்கு. என்னுடைய இந்த நிலை எனக்கே வியப்பாக இருந்தது. அன்பு எவ்வளவு புனிதமானது! யாரிடமாவது உண்மையான அன்பு ஏற்பட்டு விட்டால் இடையில் ஏதாவது சம்பவங்களால் மனத்தாங்கல் அடைந்து அவர்

களைப் பிரிந்து வாழ்ந்தாலும் கூடச் சமய சந்தர்ப்பங்களில் அவர்களைப் பார்க்கும்போது மனம் தானாகப் பழைய அன்பைக் காட்டி விடுகிறதே!

அவளை என்னால் விரட்ட முடியவில்லை. வாவென்று அழைத்து உள்ளே கூட்டிச் செல்லவும் இயலவில்லை. பேசாமல் உள்ளே நுழையத்தான் முடிந்தது.

நான் எண்ணியபடியே அவள் என்னைப் பின் தொடர்ந்தாள். நான் அவளை மறுபடியும் ஏறிட்டுப் பார்த்தேன். இப்போது அவள் கண்கள் ஒவ்வொன்றிலும் குற்றாலத்து அருவி பாய்ந்து வழிந்து கொண்டிருந்தது.

அடுத்த நிமிடம் அவள் 'பொத்' தென்று என் கால்களில் விழுந்தாள். "எனக்கு நினைவு தெரிந்த நாளாக என்னிடம் அன்பு காட்டியவர் யாரும் இல்லை. அன்பு என்பது என்ன? அது எப்படி இருக்கும் என்பதைக் கூட நான் அறிந்தவள் அல்ல. தாங்கள் இடையில் என் வாழ்க்கையில் குறுக்கிட்டீர்கள். தூய்மையான அன்பின் தன்மையை எனக்கு உணர்த்தினீர்கள். நான் உய்ந்து விடுவேன், எனக்கும் வாழ்க்கை உண்டு என்ற இறுமாப்பு ஏற்பட்ட சமயம் என்னைக் கை விட்டு விட்டீர்களே!" என்று குலுங்கக் குலுங்கக் கதறினாள்.

என்னைச் சமாளித்துக் கொண்டு அவளோடு பேசக்கூடிய நிலைமைக்கு வர எனக்கு இரண்டொரு நிமிடங்கள் தேவைப்பட்டன.

கடுமையைச் சிரமப்பட்டு வருவித்துக் கொண்டு, "நம்பியவர்களைத் திருடன் கூட மோசம் செய்யத் துணிவதில்லை. நீ அவர்களை விட மோசமானவள். மணமாகியிருந்தும் சுயநலத்துக்காக என்னைப் பலியிட முயற்சி செய்தாய் அல்லவா? செய்வதையும் செய்து விட்டு இவ்வளவு நாட்களுக்குப் பிறகு உறவாடவும் வந்து விட்டாயே?" என்று ஆத்திரத்துடன் கேட்டேன்.

பெண்தான் எனினும் தோன்றியபடி பேசியதில் அவளுக்கும் கொஞ்சம் கோபம் வரத்தான் செய்தது. அதை அடக்கிக் கொண்டு அவள் நிதானமாகவே பதில் சொன்னாள். "என் கதை பெரிய கதை. அதைக் கேட்க உங்களுக்கு விருப்பம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் நான் அதை இந்தச் சுவருக்காவது சொல்லிவிட்டுத்தான் போகப் போகிறேன். அதற்கு நீங்கள் தடை சொல்ல மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். அப்படிப் பலவந்தமாக வெளிப்படுத்தினாலும் நான் போகப் போவதில்லை......" என்று சொல்லவே, என்னையும் அறியாமல் நான் அவள் சொல்வதைக் கேட்கத் தயாரானேன்.

* * *

பூமிக்குப் பாரம் என்பார்கள். ஆனால் என் விஷயத்திலோ நான் எனக்கே பாரமாக இருந்தேன். சின்னஞ் சிறு வயதிலேயே பெற்றோர்களை இழந்தவள் நான். அந்த நாளிலிருந்து இந்த நாள்வரை நான் எப்படி வளர்ந்தேன் என்று சொல்ல வேண்டுமானால் ஒவ்வொரு நாளைப் பற்றியும் ஒரு பெருங் கதையே சொல்லி விடலாம்.

எப்படியோ ஒரு வழியாக நான் வளர்ந்தேன். இவ்வளவு நாட்களைப் போல் இல்லாமல் எனக்கென்று நானாக ஒரு வழியை அமைத்துக் கொண்டு ஸ்திர வாழ்க்கை வாழ வேண்டும் என ஆசைப்பட்டேன்.

பெண்களுக்குப் பல வகைகளிலும் சௌகர்யமாக இருக்கக் கூடிய தொழில் உபாத்தியாயர் உத்தியோகம்தான். மற்ற விஷயங்களில் துரதிர்ஷ்டசாலியாகப் படைத்த காரணத்தால்தானோ என்னவோ, தெய்வம் இந்த விஷயத்தில் என்னை வஞ்சிக்கவில்லை. கை ஊன்றுமலேயே கர்ணம் போட்டேன் என்று சொல்லக்கூடிய வகையில், நானும் பொருள் உதவியோ, வேறு சௌகர்யங்களோ பிறரிடமிருந்து பெறாமல் உபாத்தியாயினியானேன்.

என்னுடைய வாழ்க்கையின் உண்மையான சோதனைக் காலம் ஒன்று உண்டென்றால் அது இங்கேதான் ஆரம்பமாயிற்று. அதை வேதனைக் காலம் என்று குறிப்பிட்டால் கூடப் பொருத்தம்தான்.

சமூகம் எவ்வளவோ முன்னேறி இருக்கலாம். ஆண்களோடு, பெண்களும் சரிநிகர் சமானமாக வாழலாம். ஆனால் பெண்கள் தனியாக வாழ்வது என்பது மட்டும் நடக்கக் கூடிய காரியம் அல்ல.

நான் தனியாக வாழ்ந்த போது பல ஆடவர்கள் என்னிடம் பல்லைக் காட்டிப் பேசினார்கள். அவர்களில் ஒருவரிடம்கூட எனக்குக் காதல் ஏற்படவில்லை. அதே போல அவர்களுக்கும் என்னிடம் காதல் ஏற்படவில்லையென்பது தான் என் இறுதியான முடிவு.

என்னுடைய துரோகத்தால் உங்களைப் பலியிட முயன்றேன் என்று குற்றம் சாட்டுகிறீர்களே! பெண்கள் எவ்வளவுதான் ராக்ஷஸிகளாக இருந்தாலும் ஆண்களை அவர்களால் பலியிட முடியுமா? பல சந்தர்ப்பங்களில் பழி வாங்கவே முடிவதில்லையே!

மிச்சப் பொழுது நாட்களையும் எப்படிக் கழிப்பது என்று தவியாய்த் தவித்தேன். பல நாட்களைக் குழப்பத்தோடு கழித்த பிறகு என் மனத்தில் ஒரு தீர்மானம் உருவாயிற்று.

பெண்கள் ஏமாந்து போவதெல்லாம் ஆடவர்கள் 'கல்யாணம்' என்ற பிரயோகத்தை ஏற்படுத்தி அவர்களை மடக்க முயலும் சமயங்களில் தான். எனவே பெண்கள் ஆடவர்களின் தொண தொணப்பு இன்றி அமைதியாக வாழ வேண்டும் என்றால் கல்யாணம் என்ற போர்வைக்குள் ஒளிந்து கொள்வது தான் உகந்த வழி.

இந்தத் தீர்மானத்தைச் செயலுக்குக் கொண்டு வருவதில் முதல் படியாக அந்தக் கதையைக் கட்டினேன்:—'நான் மணம் ஆனவள்; என் கணவன் என்னைத் தள்ளி வைத்து




விட்டான். ஆனால் அவ்வப்போது அவன் என்னைப் பார்த்துவிட்டுப் போகிறான்.'

இந்தக் கதையால் நான் பூரணமாக அமைதியைப் பெற முடியவில்லை. என்றாலும் நூற்றுக்கு நூறு சதம் கயவர்களாக உள்ளவர்களிடம் தவிர மற்றவர்களிடமிருந்து தப்பித்துக் கொள்ள முடிந்தது.

* * *

அவள் தன் கதையை உருக்கமாகச் சொல்லி முடித்தாள். அதைக் கேட்டபின் இவளைப் படாத பாடும் படுத்தி விட்டோமே என்று என் மனம் அங்கலாய்த்தது.

"என்னை எப்படி நம்புவது என்று நீங்கள் தயங்கலாம். ஆமாம், என்னை எப்படி நம்ப முடியும்? என்னுடைய வார்த்தைகள் அவ்வளவும் உண்மை என்று எடுத்துச் சொல்ல எனக்குத் தாயோ, தந்தையோ, செல்வமோ கிடையாது. என்னுடைய வார்த்தை ஒன்றுதான் எனக்கு நாதி.

"ஆனால் ஒன்று மாத்திரம் சொல்கிறேன். நான் எவ்வளவோ பேரிடம் சுயநலத்தோடு நடந்து கொண்டிருக்கலாம். ஆனால் உங்களிடம் துளிக்கூட அப்படி நடந்து கொள்ளவில்லை. வேண்டுமானால் என் கழுத்தைப் பாருங்கள், மஞ்சள் நூல், திருமங்கல்யம் இல்லை. கால் விரல்களிலும் மெட்டி போட்ட சுவட்டைக் காண முடியாது. இவைகளையும் எடுத்து எறிந்திருப்பேன் என்று சொன்னால் அது வாதமே அல்ல. எந்த இந்தியப் பெண்தான் மணவினையில் கட்டப்பட்ட நூலை எடுத்தெறியத் துணிவாள்?"

இவ்வளவு நேரமும் அடக்கி வைத்துக் கொண்டிருந்த அழுகை அவ்வளவும் குபீரென்று கிளம்பிற்று. அவள் ஓவெனக் கதறினாள்.

நான் அவளை வாரி எடுத்து அணைத்துக் கொண்டேன். "கோமளம்! நீ என்னுடையவள். இனி உன்னைப் படைத்தவனே வந்து உன்னைப்பற்றி அவதூறாகச் சொன்னாலும் நான் அதை ஏற்றுக்கொள்ள மாட்டேன். ஆண்கள் எவ்வளவு விரைவில் பெண்களிடம் காதல் கொண்டு விடுகிறார்களோ, அவ்வளவு விரைவில் சந்தேகமும் கொண்டு விடுகிறார்கள். என்னை மனப்பூர்வமாக மன்னித்து விடு......" என்றேன்.

அவள் தலையை நிமிர்த்தினாள். அதில் மகிழ்ச்சியின் ரேகை மிளிர்வதைக் காண எனக்குப் பாந்தமாக இருந்தது.

"நிஜமாகவா?" என்று கேட்டவள் என்னை மறுமுறையும் பார்த்தாள்.

"என் சொல்லில் சந்தேகமா, உனக்கு?" என்று கேட்டேன்.

"இல்லை. உங்களைப்போல் கொண்ட சந்தேகத்தைக் கன சீக்கிரம் களைந்தெறியக் கூடிய கணவன் ஒரு பெண்ணுக்குக் கிடைத்து விட்டால் அவள் அதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது?" என்றாள் முறுவல் தாண்டவமாட.

இரண்டொரு நாட்களுக்குள் எங்கள் திருமணம் சம்பிரமமாகக் கோயிலில் நடந்தேறியது. உலை வாய்க்கோ, அல்லது ஊர் வாய்க்கோ நாங்கள் சிறிதும் அஞ்சவில்லை.

# H·M·V Radio

OF EXCEPTIONALLY
WIDE RANGE &
FINE REPRODUCTION



6 வால்வு, 5 வேவ்பாண்ட் கொண்ட
சிறந்த நம்பகமான ரேடியோ.
மாடல் 5162 ஏ. ஸி. மெயின்களுக்கு.
மாடல்5261டி.ஸி./ஏ.ஸி.மெயின்களுக்கு
இந்தியாவெங்கும் இதன் விலை ரூ. 520/-

★ ★



ஏ. ஸி. மெயினில் இயங்கும் இச்
சிறந்த எச் எம் வி 'ஆட்டோ
எலக்ட்ரோகிராம்' மாடல் 5963
மூலம் சங்கீதத்தை நேரில் கேட்
பதுபோன்ற மகிழ்ச்சியுறலாம்.




The Hallmark of Quality

THE GRAMOPHONE COMPANY LTD.

Calcutta · Bombay · Madras · Delhi

HMV/G/12

# லிப்டன்
## டீ கெர்ல்




சிறந்த ஸ்ட்ராங் டீ
தருகிறது

LTGX 28 TM

# யோகாசனச் சிகிச்சை

வி. என். குமாரசாமி

## 18. சந்தேக விளக்கம்

**கேள்வி:**—எனக்கு ஆறு வருஷ காலமாகப் பீனிச நோய் இருக்கிறது. அநேக வித மருந்துகள் சாப்பிட்டேன், நசியம் பண்ணினேன். மூக்கில் ஆபரேஷன் செய்து கொண்டேன். ஒரு வகையிலும் குணம் தெரியவில்லை. மூக்கடைப்பு, தும்மல், மலச்சிக்கல் இன்னமும் இருந்து வருகிறது. வாரத்துக்கு ஒரு தரம் பேதிக்கு மருந்து சாப்பிட்டால்தான் வெளிக்குப் போகிறது. தும்மல் அதிகமானால் மூச்சுவிடக் கஷ்டமாக இருக்கிறது. "கல்கி"யில் தங்கள் கட்டுரைகளைப் பார்த்துச் சிரசாசனம் மட்டும் 50 நிமிஷம் செய்து வருகிறேன். இந்த நோய்களுக்கு வேறு எந்த ஆசனங்களைச் செய்யலாமென்பதற்கு "கல்கி" பத்திரிகையில் பதில் எதிர்பார்க்கிறேன்.

**பதில்:**—மலச்சிக்கலை முதலில் தீர்க்க வேண்டும். அதற்கு வெறும் சிரசாசனம் மட்டும் போதாது. புஜங்காசனம் மூன்று தடவை, சலபாசனம் மூன்று தடவை, தனுராசனம் மூன்று தடவை, பஸ்சிமோத்தானு மூன்று தடவை, ஜானுசிர்ஷாசனம் மூன்று தடவை, ஹலாசனம் ஆறு தடவை, சர்வாங்காசனம் பதினைந்து நிமிஷம், மத்ஸ்யாசனம் மூன்று நிமிஷம், சிரசாசனம் இருபது நிமிஷம், அர்த்த மத்ஸ்யேந்திரா மூன்று தடவை, யோக முத்திரா ஆறு தடவை, உட்டியாண நௌலி பத்து தடவை, சாந்தியாசனம் ஐந்து நிமிஷம் செய்ய வேண்டும். பிறகு பீனிசத்துக்காக மூச்சுப் பயிற்சிகளையும் செய்து வரவேண்டும்.

உணவிலும் மாறுதல் அவசியம். முழுத் தவிட்டுடன் அரிசியைக் கஞ்சி வடிக்காமல் சமைத்து உண்ண வேண்டும். காய்கறி, கீரை வகைகள் அதிகம் சாப்பிட வேண்டும். பால் பழங்கள் நிறையச் சேர்க்க வேண்டும். இப்படிச் சில மாதங்கள் சாப்பிட்டு வந்தால் மலச்சிக்கல் விலகும். காப்பி, டீ அருந்தக் கூடாது. மற்ற லாகிரிப் பொருள்களும் உபயோகிக்கக் கூடாது.

**கேள்வி:**—காது இருக்க இருக்கச் செவிடாகி வருகிறது. அதற்கு என்ன ஆசனம் செய்யலாம்?

செவிடு:—காது செவிடு பல காரணங்களால் ஏற்படும். எதனால் ஏற்பட்டது என்று தெரிந்தால் ஆசனங்களால் போதுமா என்பதைச் சொல்லலாம். ஒரு கால் இரத்த ஓட்டம் சரிவர யில்லாமையினால் காது மந்தம் ஏற்பட்டது என்றால் ஆசனம் செய்யலாம். குணமேற்படும். அதற்குப் புஜங்காசனம், பஸ்சிமோத்தானு, ஜானு சிர்ஷாசனம், சர்வாங்காசனம், மத்ஸ்யாசனம், சிரசாசனம், அர்த்த மத்ஸ்யேந்திராசனம், திரிகோணாசனம் இவற்றைச் செய்ய வேண்டும்.

விவரங்களுக்கு நேரில் எழுதவும். அல்லது ஆரோக்கிய ரகசியத்தில் பார்க்கவும்.

**கேள்வி:**—ஆசனங்கள் செய்து முடிந்து அரை மணி நேரம் பொறுத்துத்தான் குளிக்க வேண்டும் என்கிறீர்களே, உடனே குளித்தால் என்ன ஆகும்?

**பதில்:**—ஆசனங்கள் செய்வதால் உடல் அவயவங்கள் எல்லாம் பயிற்சி பெற்றிருக்கும். சாதாரணமாகப் பயிற்சி அடைந்த பாகத்துக்கு அதிக இரத்தம் போய்க் கொண்டிருக்கும். அவை படிப்படியாகக் குறைந்து சமநிலைக்கு வர அரைமணி நேரம் ஆகும். அதற்குள் வேறு வேலைகளைச் செய்யாமல் இருந்தால்தான் ஆசனங்களால் பூர்ண பலன் அடைய முடியும். உடனே குளித்தால் சருமத்துக்கு இரத்தம் திருப்பப் பட்டுப் பயிற்சி பெற்ற அவயவங்களுக்குப் போதிய ரத்த போஷணை கிடைக்காமல் வாடும். அதனால் எந்த வேலையும் செய்யாமல் வெறுமனே உட்கார்ந்திருக்க வேண்டிய தில்லை. தேக சிரமம் அதிகம் இல்லாத சாதாரண வேலைகளைக் குளிக்கப் போகும் வரை செய்யலாம்.

**கேள்வி:**—சாப்பிட்டவுடன் குளித்தால் என்ன?

**பதில்:**—குளித்துப் பார்த்தால் தெரிந்து விடுகிறது! அஜீரணமும் பேதியும் உண்டாகும். சாப்



10-4-54 அன்று கல்கத்தா நாடகக் கலைக் கழகத்தின் ஆதரவில் "அந்தமான் கைதி" என்னும் நாடகத்தை கழக உறுப்பினர்கள் திறம்பட நடித்தனர். அப்பொழுது பர்துவான் மகாராஜாதி ராஜா ஸர் உதய சந்த் மகதாப் அவர்கள் நாடகக் கலைக்கழகத்தை ஆரம்பித்து வைத்துப் பேசினார். மகாராஜாவுக்கு அருகில் அமர்ந்திருப்பவர் கழகத் தலைவர் ஸ்ரீ எஸ். சுவாமிநாதன்.



எழும்பூர் வேத சபையின் ஆதரவில் ஸ்ரீராமநவமி உற்சவம் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. நீதிபதி எ. எஸ். பி. ஐயர் அவர்களின் தலைமையில் ஸ்ரீ டி. ராமசாமி ஐயங்கார் அவர்கள் 'காகுத்தனின் கருணை' என்னும் பொருள் பற்றி வால்மீகி ராமாயணம், கம்பராமாயணம், ஆழ்வார்களின் பாசுரங்கள் ஆகியவற்றிலிருந்து அரிய மேற்கோள்கள் காட்டிச் சிறந்த சொற்பொழிவு நிகழ்த்தினர். வேத சபையை நல்ல முறையில் நடத்திவரும் ஸ்ரீ எம். ஆர். வி. சாஸ்திரிகளின் சேவை பெரிதும் பாராட்டப்பட்டது.

---

பிட்டஆகாரத்தை ஜீரணிக்கக் குடல்களுக்குஅதிக ரத்தம் போய்க் கொண்டிருக்கும். அப்பொழுது குளித்தால் இரத்தம் குடல்களுக்குப் போவது தடைப்பட்டுச் சருமத்துக்கு வரத் துவங்கும். அதனால் வயிற்றிலுள்ள ஆகாரம் சரிவர ஜீரணமாகாமல், அஜீரணம், வயிற்று வலி பசியின்மை, மந்தம், பேதி முதலியன உண்டாகும்.

கேள்வி :—தங்கள் அருமையான கட்டுரைகளைப் படித்ததின் பயனாக, முழுச் சோம்பேறியாக இருந்த நான் ஆசனங்களைச் செய்ய வேண்டுமென்ற ஆவலால் தூண்டப் பட்டு, சில ஆசனங்களைச் செய்து, இப்பொழுது புது மனிதனாக மாறி விட்டேன். சோம்பல் என்பதே என் அகராதியில் இல்லாமலே போய் விட்டது. பார்க்கும் நண்பர்கள், 'நீ முன்னைவிட நன்றாய்க் காணப் படுகிறாய்!' என்று சொல்லும் அளவுக்கு முகத்தில் தேஜஸையும், களையும் ஏற்பட்டிருக்கிறது. இதற்குஎன்றென்றும் தங்களுக்கு நன்றிசெலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன். ஆனால் ஒரு குறை. அடிக்கடி எனக்கு உஷ்ணமாய் விடுகிறது. இதற்கு என்ன செய்யலாம்? உணவில் ஏதாவது மாறுதல் செய்ய வேண்டுமா? அப்படிச் செய்ய வேண்டுமானால் தயவு செய்து எழுதுங்கள். தாங்கள் தெரிவிக்கும் முறைப்படி நடப்பதற்குச் சித்தமா யிருக்கிறேன்.

பதில் :—ஆசனங்களைப் பழகினாலே உடல் உறுப்புகள் மிக்க சுறுசுறுப்பாகவும் எப்பொழுதும் தன் வேலைகளைச் செய்யச் சித்தமாகவும் இருக்கும். இயற்கையும் அந்த மாதிரி தான் இருக்கச் சொல்லுகிறது. அவயவங்களுக்கு எந்த விதத் தூண்டுகோலும் வேண்டியதில்லை. இதுதான் ஆசனங்கள் மகிமை. வேலை ஓடவில்லை என்ற பேச்சே கிடையாது. அதனால் ஆசனம் செய்பவர்களுக்குக் காப்பி, டீ, கோக்கோ, புகையிலை, பொடி போன்ற தூண்டும் பொருள்கள் அவசியமில்லை. ஆசனம் செய்பவர்களால் நன்றாய்ப்பசித்துச் சாப்பிடவும், சாப்பிட்டதை ஜீரணமாக்கவும் முடியும். அதனால் மிளகாய், மிளகு, இஞ்சி, பெருங்காயம், கடுகு போன்ற துணைப் பொருள்கள் சிறிதும் அவசியமே இல்லை.

ஆகையால் மேற்படி தூண்டும் வஸ்துக்களை நீக்கி விட்டால் உடல் உஷ்ணமாகாது. ஆசனங்களுடன் மேற்கண்ட வஸ்துக்களையும் சேர்த்துக் கொண்டால் எரியும் தீயில், மீண்டும் எண்ணெய்வார்த்ததற்கொப்பாகத்தான் முடியும்.

முழுத் தவிட்டுடன் கூடிய அரிசியை ஆசனம் செய்பவர்கள் உபயோகித்தால் உஷ்ணம் தணியும். புளிக்குப் பதில் எலுமிச்சை சேர்த்து வந்தால் உஷ்ணமாகாது. சீனிக்குப் பதில் பனை வெல்லமும், பனங் கற்கண்டும் உபயோகிக்கலாம். காரத்தை முற்றிலும் தள்ளுவது கஷ்டமாய் இருக்கும். சொல்லுவது சுலபம். செய்கையில் சில நாட்கள் காட்டலாம். எப்பொழுதும் சாத்தியமாகாது. மிக லேசாய்ச் சேர்ப்பதில் குற்றமில்லை. அப்படியும் உஷ்ணமானால் சில நாட்கள் சேர்க்காமலேயே இருக்கலாம். தோசைக்கும், இட்லிக்கும், ரொட்டிக்கும் வெண்ணெய் உபயோகிக்கலாம். வெள்ளை வெங்காயத்தை நறுக்கி உப்பு சிறிது போட்டு நெய்யில் வதக்கிக் காலையில் சாப்பிடலாம். மணத்தக்காளிக் கீரை ஒரு பிடியுடன் ஒரு அவுன்ஸ் வெங்காயம் நறுக்கி வீசம் படி பால் விட்டு வேகவைத்து வெறும் வயிற்றில் சாப்பிடலாம். உளுந்தம் பருப்பு சேமைக் கூட்டு நல்லது. உளுந்தம் பருப்பு வெங்காயக் கூட்டு நல்லது. உளுந்தம் பருப்பு மணத்தக்காளிக் கீரைக் கூட்டும் செய்யலாம். இதிலெல்லாம்காரமேபோடக்கூடாது. முழு உளுந்து உப்பு போட்டு வேகவைத்துச் சிற்றுண்டிக்குச் சாப்பிடலாம். முழு உளுந்து திரித்து வெல்லம்போட்டு ஹல்வாஇன்டிச் சாப்பிடலாம். வெறும் உப்புப் போட்டு களிபோல் கிண்டிச் சாப்பிடலாம்.

பாதாம் பருப்பு கசகசா சம எடை எடுத்து இரண்டத்தனை பனங்கற்கண்டு போட்டு, நெய் விட்டு ஹல்வா செய்து சாப்பிட்டால் உஷ்ணம் இருக்கும் இடம் தெரியாமல் பறந்து விடும். குல்கந்து இரவில் சாப்பிட உஷ்ணம் தணியும். வாழைப்பூ சமையலில் உபயோகிக்கலாம். மாதுளம்பழம், திராட்சை உஷ்ணத்தைத் தணிக்க வல்லது. கீரைகளில் வசலைக்கீரை, அகத்தி, முளைக் கீரை, பசலை இவை நல்லது. இந்த மாதிரி

மற்றும் எத்தனையோ உண்டு. இவைகளெல்லாம் அவரவர்கள் சௌகரியம் போல் தங்கள் ஊரில் கிடைப்பதைக் கொண்டு செய்யலாம். ஆனால் எப்போதும் பத்தியச் சாப்பாடு போல் சாப்பிட வேண்டுமென்பதுமில்லை. இவைகளில் சாதாரணமாய்த் தினசரி செய்து கொள்ளக் கூடியவைகளும் இருக்கின்றன. எதையாவது ஒன்றை ஒரு நாள் செய்யலாம். மற்றதை மறுநாள் செய்யலாம். இந்த உணவு வகைகளுடன், மற்றவைகளையும் சாப்பிட்டுக்கொண்டு ஆசனம் செய்து வந்தால் உடல் உஷ்ணம் ஆகாது. வாரம் இரண்டு நாள் எண்ணெய் தேய்த்துக் குளிக்கலாம். தொட்டி ஸ்நானம் வெகு நல்லது.

கேள்வி :—ஆசனங்களைக் காலையில் செய்ய வசதி இல்லாதவர்கள் இரவு எட்டு மணியிலிருந்து ஒன்பது மணிக்கு இடையில் சாப்பிட்டு விட்டு இரவு பதினொரு மணிக்குப் படுத்து, விடியற்காலை நாலு மணிக்கு எழுந்து சர்வாங்காசனம், ஹலாசனம் மத்ஸ்யாசனம் இவைகளை அரை மணி நேரத்தில் செய்துவிட்டு மறுபடி ஐந்து மணிக்குள் படுத்துக் காலை ஆறரை மணிக்கு எழுந்திருக்கலாமா ? இப்படிச் செய்வதால் உடலுக்கு ஏதாகிலும் கெடுதல் ஏற்படுமா ?

பதில் :—இவர் யோசனை வேடிக்கையாய் இருக்கிறது. காலையில் செய்ய முடியவில்லை என்பதற்காக நாலு மணிக்கு எழுந்து அரை மணி நேரம் ஆசனம் செய்து விட்டு மறுபடி தூங்குவது சரியல்ல. அதற்குப் பதில் காலை ஆறு மணிக்கு எழுந்திருந்து ஆறரை மணிக்குள் ஆசனத்தை முடிக்கலாமே ! அல்லது இரவு எட்டு மணியிலிருந்து எட்டரை மணிக்குள் ஆசனத்தை முடித்து விட்டு ஒன்பது மணிக்குச் சாப்பிடலாமே ! ஆம். நீங்கள் சொல்லுவதைப் போல் செய்தால் உடலுக்குக் கெடுதிகள் நேரிடும். அரை மணி நேரம் ஆசனம் செய்பவர்கள் சர்வாங்காசனம் பத்து நிமிஷம், மத்ஸ்யாசனம் இரண்டு நிமிஷம், சிரசாசனம் ஏழு நிமிஷம், சாந்தியாசனம் ஐந்து நிமிஷம் நாடி சுத்தி பதினைந்து தடவை செய்யலாம்.

கேள்வி :—நான் தங்களுடைய ஆசன விரிவுரைகளைப் படித்து நடைமுறையில் பழகிக் கொண்டும் அதன் பலன்களை அடைந்து கொண்டும் வருகின்றேன். நான் ஒரு குருவினிடம் உபதேசம் பெற்றவன். அவர் சிரசாசனம் அறவே கூடாதென அவர் குறிப்பில் எழுதியிருக்கிறார். சிரசாசனம் கடைசி மரண காலத்தில் அதிக கஷ்டத்தைக் கொடுக்குமாம். மற்றும் ஆராய்ச்சிக் குறைவும் ஏற்படுகின்றது என்கிறார். இது சரியா ! தாங்கள் சரியான விளக்கம் தரக் கோருகிறேன்.

பதில் :—உங்கள் குருவின் உபதேச முறை என்ன என்பது தெரியாது. இதுவரை சிரசாசனம் செய்து மரண காலத்தில் கஷ்டப்பட்டவர்களைப் பார்த்ததில்லை. ஆராய்ச்சிக் குறைவு ஏற்படும் என்று இவர் சொல்லுவது முற்றிலும் உண்மைக்குப் புறம்பானது. மச்சேந்திர மாமுனிவர், பதஞ்சலி மாமுனிவர், ஸ்வாத்மராம யோகீஸ்வரர் போன்ற மகா புருஷர்கள் யோகாசனங்களை வழங்கியிருக்கிறார்கள். அவர்கள் அளித்த யோகக் கலையில் என்னும் குற்றம் கண்டு பிடிக்க முடியாது. தவிர, யாருக்கும் அவரவர்களின் அபிப்பிராயப்படி நடக்கச் சுதந்திரம் உண்டு.

# படித்துப் பாருங்கள் !

1. சாரதையின் தந்திரம்
2. இலங்கையில் ஒரு வாரம்
3. மூன்று மாதம் கடுங்காவல்
4. நம் தந்தையர் செய்த விந்தைகள்

சில கதைகள் படிப்பவர் மனத்தை உருக்கி விடும் ; சில கதைகள் இன்ப நினைவுகளை எழுப்பி இன்பத்தில் லயிக்கச் செய்து விடும்; சில கதைகள் வேதனைப் புயலை வீசி வேதனையில் ஆழ்த்திவிடும்; சில கதைகள் ஆரம்பத்தி லிருந்து முடிவு வரையில் சிந்தனைக்கு விருந்தா யமைந்துவிடும் ; சில கதைகள் குலுங்கக் குலுங்கச் சிரிக்க வைக்கும்.

மேற்கூறிய ஒவ்வொரு வகைக் கதைக்கும் உதாரணம் வேண்டுமானால் " சாரதையின் தந்திரம் " என்னும் கதைத் தொகுதியில் காணலாம்.

தங்கையின் கணவனை நல்வழிப் படுத்தச் சாரதை செய்த தந்திரங்கள் ஒரு கோவையாக அமைந்து அழகிய கதை உருவம் பெற்றுவிட்டன.

உலகத்துக் கதைகளில் உத்தம சகோதரர்கள் எத்தனையோ பேர்களைப் பார்த்திருக்கிறோம். ஆனால் அவர்களில் யாரும் சுபத்திரையின் சகோதரன் ராஜகோபாலனுக்கு இணையாக மாட்டார்கள். அவன் தன் அருமைத் தங்கையின் நல் வாழ்வுக்காக, அவள் முகத்தில் என்றும் புன்சிரிப்பு பொலிவதற்காக, அவளது மண வாழ்வு புது மணமும் புத்துயிரும் பெற்று விளங்குவதற்காக உயிர்த் தியாகம் புரிந்த உத்தமன். " சுபத்திரையின் சகோதர "னை எத்தனை தடவைகள் வேண்டுமானாலும் படிக்கலாம்.

மேன்மை தங்கிய ஜமேதார் ஜெனரல், கிலேதார் மேஜர், சதவியாக்ர சம்ஹாரி, மகாராஜாதி ராஜ விஜயபுவன சம்ராட், ஸர் ஜிலானி ஜங் ஜங் பஹதூர் அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும், வீர தீரங்களைப் பற்றியும் சுவையுடன் சொல்லிச் சிரிக்க வைக்கிறது " புலி ராஜா " என்னும் கதை.

பத்துச் சிறு கதைகள் கொண்ட " சாரதையின் தந்திரம் " என்னும் இந்தச் சிறு கதைத் தொகுதியின் விலை : ரூ. 3—4—0.

" எங்கே போகிறீர் !"

" இலங்கைக்கு !"

" இலங்கைக்கா ! சிலோனுக்கா !"

" சிலோனுக்கு !"

" சிலோனுக்கு எதற்கு !"

" சிலோனைச் சுருட்டி எடுத்துக் கொண்டு வருவதற்கு !"

" வந்து...... !"

" விரித்துக் கொண்டு படுப்பதற்கு !"

" சரி. நீர் எந்த வருஷம் பிறந்தீர் !"

" 1953-ல்."

" எங்கே பிறந்தீர் !"

" ஒரு இருட்டறையில்."

" சாட்சி உண்டா !"

" கிடையாது !"

" அது மிகவும் வருந்தத் தக்கதுதான். நீர் எப்பொழுது இறந்தீர் !"

" 1950-ல் !"

" எங்கே !"

" காஷ்மீரில் நடந்த விமான விபத்தில் !"

" பிறகு இங்கு எப்படி வந்தீர் !"

" இந்திய சர்க்கார் விமான விபத்தைப் பற்றி விசாரிக்கக் கமிஷன் ஒன்று நியமித்தார்கள். கமிஷன் விசாரித்து, 'விபத்து நேரிடவே இல்லை'

என்று முடிவு செய்தது. நானும் அந்த முடிவை ஒப்புக் கொண்டு இங்கே வந்தேன்!"

"ரொம்ப வருந்தத் தக்க விஷயம். ஓக்கே! நீர் போகலாம்!"

மேற் கண்ட சம்பாஷணையுடன் கல்கி ஆசிரியரின் "இலங்கையில் ஒரு வாரம்" ஆரம்பமாகிறது. எப்படித் தொடருகிறது, எவ்வாறு முடிகிறது என்பதைப் புத்தகத்தில் நேர்முகமாகப் படித்துத் தெரிந்து கொள்வது நலம். விலை : ரூ. 1—8—0.

சிறைச்சாலைப் பக்கமே போகாமல், "மூன்று மாதக் கடுங்காவல்" தண்டனையைச் சுவாரஸ்யமாகவும் குதூகலமாகவும் அநுபவிக்க விரும்புவோருக்கு இந் நூல் ஒரு சிறந்த சாதனமாகும்.

இந்தியாவில் பிரிட்டிஷ் அதிகார வர்க்க ஆட்சி நடந்து கொண்டிருந்த பழைய காலத்தில், காந்தி மகான் தலைமையில் நடைபெற்ற சுதந்திரப் போராட்டத்தை இந்த நூல் நமது நினைவுக்கும் அநுபவத்துக்கும் கொண்டு வருகிறது.

ஆசிரியர் கல்கி அவர்கள் 1941-ல் நடந்த தனிப்பட்டவர் சத்தியாக்கிரஹத்தில் ஈடுபட்டு, மூன்று மாதம் கடுங்காவல் தண்டனை பெற்றுச் சிறைவாசம் செய்தபோது அடைந்த அநுபவங்களை இந்த நூலில் விவரித்திருக்கிறார்.

சிறையில் அவர் கண்ட தமிழ் நாட்டு அரசியல் பிரமுகர்களைப் பற்றியும் அவர்களுடைய குணாதிசயங்களைப் பற்றியும் எழுதியிருக்கிறார்.

இந்த நூலில் சிறை அநுபவம் மட்டும் கூறப்படவில்லை. தலைவர் ராஜாஜி அவர்களின் இணையற்ற ஹாஸ்யங்கள், கம்பராமாயணம் வால்மீகி ராமாயண வகுப்புகள், இலக்கியச் சர்ச்சைகள், தேயிலைப் பானம், காப்பி முதலியவை தயாரிக்கும் விதம், அவற்றை ரஸித்துப் பருகும் முறைகள் இவ்வளவும் சேர்ந்து இந்த "மூன்று மாதம் கடுங்காவலை" மிகவும் சந்தோஷமாக அநுபவிக்கும்படி செய்கின்றன. விலை : ரூ. 2—0—0.

உலகத்து நாடுகளை யெல்லாம் சுற்றிப் பார்த்தால் எத்தனை எத்தனையோ விந்தைகள் நிறைந்திருக்கக் காணலாம். ஆனால் அந்த விந்தைகளைக் காணுமுன்பு நம் பாரத தேசத்தில் ஆயிரம் ஆயிரம் வருஷங்களாக இருந்து வரும் விந்தைக் காட்சிகளை நாம் காண வேண்டுவது இன்றியமையாதது.

மக்கட் குலம் மாண்புடன் விளங்க வருங்கால இளஞ் சந்ததிகள் அறிவு வளம் பெற்றுத் திகழ நம் முந்தையர் பல்லாண்டுகளாகப் பாடுபட்டுக் காட்சிக்குரிய கலைப் பொருள்களைச் சிருஷ்டித்தார்கள். கல்லைக் குடைந்தெடுத்துக் கலை வளம் ததும்பும் கற்கோயில்க ளாக்கினார்கள்; தெய்வ மாக்கலைகளான சித்திரத்தையும் பல இடங்களில் சிருஷ்டித்து வைத்தார்கள்.

கற் கோயில்களுக்கும் சிற்ப சித்திரங்களுக்கும் உறைவிடமான மாமல்ல புரத்தைப் பற்றிய "கல் சொன்ன கதை" என்னும் அற்புதமான கட்டுரையும், அழியாப் புகழ் பெற்ற அமர சித்திரங்களை அழியாத வர்ணச் சேர்க்கைகளினால் அழகு பெறத் தீட்டி அஜந்தா குகைச் சுவர்களில் அமைத்துப் பாதுகாத்து வரும் அருமையைக் கூறும் "அஜந்தா அதிசயங்கள்" என்னும் கட்டுரையும் இச்சிறு நூலில் தலைமை வகிக்கின்றன. கோடிக் கரையிலிருந்து இலங்கை அநுராதபுரம், பொலன்னருவை வரையில் வந்தியத்தேவன் சென்ற வழியாக ஆசிரியரும் சென்று நமக்கு இயற்கை வளங்களையும், கலை வளங்களையும் கவினுறக்காட்டுகிறார். இதையெல்லாம் "நம் தந்தையர் செய்த விந்தைகள்" என்ற நூலில் காணலாம். விலை : ரூ 1-8 ; ஆசிரியர் : "கல்கி"; மேற்கண்ட நாலு புத்தகங்களும் கிடைக்குமிடம்: பாரதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை 17.

## பலன் என்ன ?



ஒளியெப்படியிருந்தாலும்

# 'கோடக்' பிலிம்

## திருப்திகரமான பலன் அளிக்கும்!

எப்படிப்பட்ட ஒளியிலும், ஒவ்வொரு சூட்சும விவரங்களையும் தெளிவாகக் கொடுப்பதற்கு பிரகாசமான ஒளியிலிருந்து, இருண்ட நிழல்வரை தெளிவாக பதியவைத்து உங்களுக்கு சிறந்த படங்களை அளிக்க 'கோடக்' பிலிமையே நம்புவீர்கள்.




**வெரிக்ரோம்** — அவுட்டோர் ஸ்னாப் ஷாக்கு உலகமெங்கும் வெரிக்ரோம் பிலிம்களே விரும்பப்படுகிறது.




ப்ளஸ்-X அழகான சிறந்த படங்களுக்கு. ஸ்பெஷலாக என்லார்ஜ் செய்ய விரும்பும் படங்களுக்கு மிக உத்தமமானது.




சூப்பர்-XX விறுவிறுப்பான ஆக்ஷன் படங்களுக்கு எதையும் விட சிறந்தது. மங்கிய ஒளியிலும், செயல் ஒளியிலும் நல்லபடங்களை கொடுக்கும்

● பிலிம் தீர்ந்து போய் தவிக்கும்படி வைத்துக் கொள்ளாதீர்கள். உங்கள் கோடக் வியாபாரியிடமிருந்து இரண்டு பெறுங்கள். ஒன்று உங்கள் தற்போதைய உபயோகத்திற்கும் இன்னொன்று அதிகப்படியாக கையிருப்பிற்கும் இன்றே சென்று வாங்கி வைத்துக்கொள்ளுங்கள்.

**கோடக் லிமிடெட்** (இங்கிலாந்தில் இணைக்கப்பெற்றது)
பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதறாஸ்

K. 9019

# தேன் மொழியாள்

## 13

இயற்கை அழகும் பருவக் கவர்ச்சியும் நிறைந்து இனியனின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அன்பு உருவமான தேன் மொழியாளோடு நெருங்கிய தொடர்பு ஏற்பட்ட பிறகு, அவர்கள் இருவரும் இப்படி இருந்ததில்லை.

அந்த அழகுத் தெய்வத்தின் சந்நிதானத்தில் நின்று கொண்டு, அந்தத் தெய்வ கன்னிகையான தேன்மொழியாளின் அன்பில் மூழ்கிக் கிடக்கும் பாக்கியம் கடந்த இரண்டு தினங்களாக இனியனுக்குக் கிடைக்கவில்லை.

தேன் மொழியாள் இனியனின் இதயத் துடிப்பைத் தெரிந்து கொள்ளும் நிலையில் இல்லை என்பதை எண்ணும் போது இனியனின் இதயம் துடித்தது. அவன் மனம் பொறுமை இழந்து இரண்டு தினங்களுக்கு மேலாகி விட்டன. அவன் மனத்தில் இப்பொழுது சாந்தி என்பது மருந்துக்குக்கூட இல்லை. அவன் ஒவ்வொரு கணமும் தேன் மொழியாளைப் பார்ப்பதற்குச் சென்ற சுந்தரியையும், மாணிக்கத்தையும் எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். அவர்கள் சென்று அதிக நாழி ஆகிவிட்டதால் அவனுடைய ஆவல் மேலும் அதிகமாகி விட்டது.




அந்தச் சமயத்தில் ஏதோ காலடிச் சத்தம் கேட்கவே இனியன் ஆவலுடன் திரும்பிப் பார்த்தான். அவன் தந்தையும் அன்னையும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் நேரே இனியனின் படுக்கைக்கு அருகில் வந்து அமர்ந்தார்கள்.

இனியனின் முகம் உணர்ச்சி இல்லாமல் வெளுத்துப் போயிருப்பதைக் கண்டு அவர்கள் இருவரும் ஒரே சமயத்தில் பதறிப் போனார்கள்.

"இனியா! ஏன் இப்படி இருக்கிறாய்! உன் உடம்பு ஏன் இப்படி நடுங்குகிறது!" என்று கவலையோடு கேட்டார் தந்தை.

"எனக்கு என்னமோ மனத்தில் அமைதியே இல்லை. எனக்கு இப்படி ஒரு போதும் இருந்ததில்லை" என்றான் இனியன்.

"அவர்கள் இருவரும் வந்து விட்டார்களா!" என்று கேட்டாள் அன்னை.

"இன்னும் அவர்கள் வரவில்லை."

இந்தச் சமயத்தில் மாணிக்கத்தை இரண்டு பேர் தாங்கிப் பிடித்துக் கொண்டு வந்தனர். அவர்கள் உதவியுடன் மாணிக்கம் தள்ளாடிக் கொண்டு நடந்து வந்தான். சுந்தரி சோகமே உருவாக அவனுக்குப் பின் வந்து கொண்டிருந்தாள்.

இதைப் பார்த்த இனியன் திடுக்கிட்டான். "சுந்தரி! மாணிக்கத்துக்கு என்ன!" என்று மிக்க ஆவலுடன் படபடப்போடு கேட்டான் இனியன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. ஏதோ மயக்கம். இப்பொழுது சுகமாகத்தான் இருக்கிறேன். வீணாகச் சுந்தரி அங்கிருந்த எல்லாரையும் பயமுறுத்தி விட்டாள்" என்றான் மாணிக்கம்.

சுந்தரி ஒரு மாதிரி நடந்த விஷயத்தைச் சுருக்கமாக அங்கிருந்தவர்களுக்குச் சொன்னாள். இதைக் கேட்ட இனியனின் தந்தை உடனே டாக்டருக்கு ஆள் அனுப்பித் தேன் மொழியை ஜாக்கிரதையாக கவனிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்.

இனியன் தன் தந்தையைக் கூப்பிட்டான். தான் ஒரு முறை தேன்மொழியைப் போய்ப் பார்த்து வர வேண்டும் என்றான்.



"நீ வீணாக மனத்தை அலட்டிக் கொள்ளாதே. நாளைக் காலையில் நாம் எல்லோருமே தேன்மொழியின் வீட்டுக்குப் போவோம். அவள் தந்தையிடம் நானே அவள் கல்யாணத்தைப் பற்றிச் சொல்லுகிறேன். தேன்மொழி என் மருமகள் என்று சொல்லுகிறேன். இதைக் கேட்டாலே தேன்மொழியின் உடல் குணமாகி விடும்" என்றார் தந்தை. பிறகு அங்கிருந்து சென்று விட்டார்.

அவர் சென்ற சற்று நேரத்துக் கெல்லாம் இனியனின் தாயாரும் அங்கிருந்து கிளம்பினாள். இரவு சாப்பாட்டுக்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனித்து விட்டு வருவதாகச் சொன்னாள்.

மாணிக்கத்தைப் பார்த்து, "இரவுச் சாப்பாட்டை இங்கேயே கொண்டு வரச் சொல்லட்டுமா!" என்று கேட்டான்.

"என் உடம்புக்கு ஒன்றுமில்லை. நான் அங்கேயே வந்து சாப்பிடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டு அன்னையுடன் தொடர்ந்து சென்று அவளை வழி அனுப்பி விட்டு வந்தான்.

மாணிக்கம் அப்படி நடந்து சென்று விட்டு வந்ததைப் பார்த்து இனியனும் சுந்தரியும் சந்தோஷப்பட்டனர். சுந்தரி மாணிக்கத்தைப் பொங்கி வரும் மகிழ்ச்சியோடு பார்த்தாள்.

தந்தையும் தாயும் சென்றவுடன் இனியன் மாணிக்கத்தின் வாயைக் கிளறினான். அவன் தேன்மொழியின் நிலையை ஒருவாறு இனியனுக்கு விளக்கினான். "எனக்கு என்னவோ அவள் அங்கு அப்படிக் கிடப்பதும் நீ இங்கு படுத்த படுக்கையில் இருப்பதும்தான் என் மனத்தை வேதனைப்படுத்தி மயக்கம் உண்டாக்கிவிட்டது" என்றான்.

மாணிக்கம் சொன்னதிலிருந்து இனியனுக்குத் தேன்மொழி ஏதோ அபாய நிலையில் இருக்கிறாள் என்பதை ஒருவாறு புரிந்து கொண்டான். வெறி பிடித்தது போல ஜன்னலுக்கு வெளியே உற்றுப் பார்த்துக்கொண்டு இருந்தான். அங்குள்ள செடிகளில் மலர்ந்திருந்த புஷ்பங்கள் துக்கத்தோடு அவனுக்கு வந்தனம் செய்வது போல இலேசாகக் காற்றில் அசைந்து வளைந்து கொடுத்தன. நீர் நிறைந்த கண்களோடு இனியன் அந்தப் பூக்களைப் பற்றி யோசித்தான். அந்த மலர்ந்த மலர்களைப் போன்ற தேன்மொழியைப் பற்றி எண்ணினான். அவன் வெளுத்த முகமும் துடிக்கும் உதடுகளும் அவன் உள்ளத்தில் குமுறும் துக்கத்தை, தாங்க முடியாத துயரத்தை வெளிக் காட்டின.

சட்டென்று அவன் கவனம் சுந்தரியின்மேல் திரும்பியது. "சுந்தரி! தேன்மொழியுடன் ஏதாவது பேசினாயா!" என்று கேட்டான்.

"நான் ஒன்றும் பேசவில்லை. பேசும்படியான நிலையிலும் தேன்மொழி இல்லை. அவள் ஏதோ உளறிக் கொண்டே இருந்தாள். அவள் தாயும் தந்தையும் அழுது கொண்டே இருந்தார்கள். இந்தச் சூழ்நிலையில் நான் ஒன்றும் புரியாமல் திகைத்து உட்கார்ந்து விட்டேன்" என்றாள்.

இனியன் அவள் சொன்னதைக் கவலையோடு கேட்டான். பதில் ஒன்றும் சொல்லாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். உணர்ச்சி வேகத்தில் அவன் புருவங்கள் நடுங்கின. கண்ணீர் முத்துக்கள் அவன் கண்களில் உருண்டு ஓடின.

தேன்மொழியைப் பற்றிக் கேட்ட சோகச் செய்திகள் இனியனின் அழகிய தோற்றத்தில் மிகுந்த மாறுபாட்டை உண்டு பண்ணிவிட்டன. இதயத்தில் பொங்கிய துக்கத்தை அவன் வெளியே காட்டாமல் இருக்க முயன்றான். அவனால் முடியவில்லை. ஆழ்ந்த துயரத்தின் சாயை அவன் கண்களில் படிந்திருந்தது. தளதளப்பான அவன் கன்னங்களின் நிறம் வாடி விட்டது. அவன் அழகு குலைந்து சோர்ந்து காணப்பட்டான். அவன் பலவீனமான குரல் காதல் உள்ளத்தின் பயங்கர ஏக்கத்தை எதிரொலித்தது.

சுந்தரியும் மாணிக்கமும் அவன் இருதய வேதனையை உணர்ந்து கொண்டார்கள். அவன் துயரத்தைத் துடைப்பதற்கு முயன்றார்கள். இனியன் தன் மனத்தைத் திறந்து அவர்களுக்குக் காட்டிக் கொண்டிருந்தான். தானும் தேன்மொழியும் சந்தித்துப் பேசிய நாட்களைப் பற்றிச் சொன்னான்:

"தேன்மொழி ஓர் அழகுத் தெய்வம். அவள் மாலை வேளைகளில் தினம் தினம் எங்கள் தென்னந் தோப்புக்கு வருவாள். வரும்போதெல்லாம் குடத்தை எடுத்துக் கொண்டு வருவாள். அல்லிக் குளத்தில் தண்ணீர் மொண்டு கொண்டு வருவதற்காகத்தான் குடத்தை எடுத்துக் கொண்டு வருவாள். அந்தக் குடத்தை அவள் இடுப்பில் வைத்துக் கொண்டு இருக்கும் அழகை இன்றைக் கெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கலாம்.

வீட்டிலிருந்து, இடுப்பில் குடத்துடன் ஏதாவது பாடிக் கொண்டே நடந்து வருவாள். தென்னந் தோப்புக்கு அருகில் வந்ததும் பாட்டு நின்று விடும். திரும்பிப் பார்த்தால் தென்னந் தோப்பின் வேலிப் படலைத் திறந்து கொண்டிருப்பாள். அப்படியே நேராகத் தான் ஆசையோடு வளர்த்து வரும் சிவப்புப் பசு இருக்கு மிடத்துக்குச் செல்வாள். அதன் கன்றுக்குட்டி

அவளைப் பார்த்தவுடன் துள்ளி ஓடி வரும். அதன் கழுத்தைப் பிடித்துக் கொண்டு கொஞ்சுவாள். அந்தக் காட்சி இன்பக் காட்சிதான். மான் ஒன்று கன்றுக் குட்டியின் அருகில் இருந்து இரகசியம் பேசுவது போலிருக்கும் அப்பொழுது அவள் கை வளையல்கள் குலுங்கக் கன்றுக் குட்டியைத் தட்டிக் கொடுப்பாள். இந்தக் காட்சி கன்றுக் குட்டிக்குப் பக்கத்தில் இருப்பது மான் அல்ல, தேன்மொழிதான் என்பதை நினைவூட்டும்.

கன்றுக் குட்டியை விட்டு விட்டுக் குடத்தை எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டு குளக் கரைக்கு வருவாள். குளத்தின் கரையில் அமர்ந்து குடத்தை விளக்க ஆரம்பிப்பாள். விளக்குவாள், விளக்குவாள், வெகு நேரம் விளக்குவாள். பித்தளைக் குடம் தங்கக் குடமாகிவிடும். இப்பொழுது குடத்துக்கும் அவள் நிறத்துக்கும் அதிக வித்தியாசம் இருக்காது. பத்தரை மாற்றுத் தங்கத்துக்கு மேலான அவள் மேனியோடு குடம் போட்டி போடப் பார்ப்பது போலிருக்கும்.

குடம் நிறைய தண்ணீரை எடுத்துக் கொண்டு மெல்ல அடிமேல் அடி வைத்துக் கையை வீசி வீசி நடந்து வருவாள். தென்னந் தோப்புக்கு மத்தியில், உள்ள வைக்கோல் போருக்குப் பக்கமாக வந்து என்னைத் தேடுவாள். நான் ஒளிந்து கொண்டு அவள் செய்யும் ஒவ்வொரு செய்கையையும் பார்த்துக் களித்துக் கொண்டிருப்பேன். பிறகு தண்ணீர் குடத்தை அங்கு இறக்கி வைத்து விட்டு மீண்டும் குளக் கரைக்குப் போவாள். குளத்தில் தாமரையும் அல்லியும் மலர்ந்து இருக்கும். முன்னிலவுக் காலங்களில் மாலை வேளைகளில் சில சமயம் முன்னதாகவே அல்லி மலர்ந்து விடும். மலர்ந்து குலுங்கும் அல்லி மலரைப் பார்ப்பாள். அடாடா! அந்த மலருக்கும் தேன்மொழியின் முகத்துக்கும்தான் என்ன ஒற்றுமை! அந்த மலரைச் சுற்றி வண்டுகள் சுற்றும். தேன்மொழியின் முகத் தாமரையில் உட்கார்ந்திருப்பது போல அவள் கருவிழிகள் இரண்டும் காட்சி அளிக்கும்.

சட்டென்று நான் அவள் முன் போய் நிற்பேன். அவளை அந்தச் சமயத்தில்தான் பார்த்தது போல நடிப்பேன். அவள் தன் பவழ வாயைத் திறந்து முல்லைச் சிரிப்பால் என்னை மகிழ்விப்பாள்.

நீண்ட நேரம் நானும் அவளும் பல விஷயங்களைப் பற்றிப் பேசுவோம். நாழியாகி விட்டால் சில சமயம், அவள் தாத்தா அவளைத் தேடி வருவார். தாத்தா தேடி வருவதற்குள்ளாகவே போக வேண்டும் என்று தேன்மொழி குடம் நிறைய தண்ணீருடன் வீடுபோய்ச் சேருவாள். மனம் நிறைய அவளைப் பற்றிய எண்ணத்துடன் நான் வீடு வந்து சேர்வேன்.

இப்படி எத்தனையோ நாட்கள். கிராமத்து அழகில் அவளைப் பார்க்கும்போது தேன்மொழியுடன் குளக்கரையிலும், தென்னந்தோப்பிலும், வயல் வெளிகளிலும் சுற்றி வரும்போது என் மனத்தில் புத்துணர்ச்சிகளும், நம்பிக்கைகளும் நிறைந்து நிற்கும். தேன்மொழி நன்றாகப் பாடுவாள். பாட்டு அவளுக்கு இயற்கையாகவே வந்தது. யாரும் அவளுக்குச் சொல்லிக் கொடுத்ததில்லை. அவள் பாடுவாள். அவள் பாட்டின் இனிய குரலோடு பறவைகளின் ஆனந்த கீதமும் கலக்கும். அந்த இன்னிசையும் ஆரவாரமும் என் இதயத்துக்கு எவ்வளவு இன்பத்தைக் கொடுத்தன என்பதை என்னால் இப்பொழுதுதான் உணர முடிகிறது. இரண்டு தினங்களாகத் தேன்மொழியைப் பார்க்காமல் என் உள்ளம் படும் வேதனையில்தான் நான் அவளுடன் கழித்த இன்பமான மாலை நேரங்களை உணர்ந்து அனுபவிக்க முடிகிறது'' என்றான் இனியன். ஏக்கத்தோடு ஜன்னலுக்கு வெளியே எதையோ பார்த்தான்.

இனியன் தானும் தேன்மொழியும் சந்தித்துப் பேசிய சம்பவத்தை உணர்ச்சியோடு சொன்னான். அதற்கு மேலும் அவன் சொல்ல வேண்டும் என்று நினைத்தான். ஆனால் அவனால் ஒன்றும் பேச முடியவில்லை. தலையைச் சுற்றியது. அவன் நாக்கு புரள மறுத்தது; உலர்ந்து போய் மேல் உதட்டுடன் ஒட்டிக் கொண்டு விட்டது போலாகிவிட்டது. அவன் இதயம் துடித்தது; கடல் அலைகள் பாறையில் மோதுவது போல மோதித் துடித்





"பையனுக்கு டிக்கெட்......!"

"குழந்தைக்கு மூன்று வயசு ஆகவில்லே. அவனுக்கும் டிக்கெட் கேட்கிறீரே! நானும் நாலு ஐந்து வருஷமாக இந்தக் குழந்தையோடு போய்க் கொண்டிருக்கிறேன். இது வரை ஒருவரும் டிக்கட் கேட்டதில்லேயே!"

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

தது. நீண்ட நேரம் அங்கு மௌனம் நிலவியது. இனியன் சோர்ந்து போய்ப் படுத்துக் கிடந்தான். ஒரு சூனியப் பார்வையுடன் படுத்திருந்தான். பிரமை பிடித்தவன் போல பார்த்துக் கொண்டிருந்தான். அவன் கண்கள் கலங்கி நின்றன.

சுந்தரி அவன் சொன்ன கதையைக் கேட்டு ஏதோ சிந்தனையில் இருந்தாள். மாணிக்கம் அவன் உள்ளத்தின் குமுறலை ஒருவாறு புரிந்து கொண்டு மௌனமாக உட்கார்ந்திருந்தான்.

அந்த மௌனத்தைக் கலைத்துக் கொண்டு சுந்தரி பேசினாள். "நாளைக்குத்தான் தேன் மொழியைப் பார்க்கப் போகிறோமே. அவளை இங்கேயே நம் வீட்டுக்கு அழைத்து வந்து விட்டால் போகிறது. அவள் வீட்டில் வசதிகள் ஒன்றும் இல்லை போலிருக்கிறது" என்றாள்.

"அப்படித்தான் செய்ய வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே அன்னை அங்கு வந்தாள். சுந்தரியையும் மாணிக்கத்தையும் சாப்பிட அழைத்துக் கொண்டு சென்றாள்.

** ** **

அன்று இரவு நெடுநேரம் வரை இனியனின் உள்ளத்தில் அன்றைய நிகழ்ச்சிகளைப் பற்றிய மங்கலான நினைவுகளே தோன்றிக் கொண்டிருந்ததால் அவனுக்கு மிகுந்த களைப்பாக இருந்தது. தூக்கமே வரவில்லை. அந்தக் களைப்பு அவன் உடலையும் ஆன்மாவையும் பற்றிக் கொண்டிருந்தது எனலாம். தேன் மொழியின் அழகிய முகம் அவன் மனக் கண் முன்னால் தோன்றியது. அடுத்த கணம் அந்த அழகிய முகம் மறைந்தது. படுக்கையில் படுத்துக் கிடக்கும் உணர்ச்சியற்ற தேன்மொழியின் சோக முகம் தோன்றியது. அவள் படுக்கைக்குப் பக்கத்தில் அவள் பெற்றோர்கள் பரிதாபமாய் உட்கார்ந்து கொண்டிருந்தனர். கண்களின் முன்பு ஏதோ மறைப்பது போலிருந்தது. அவனுக்கு ஒன்றும் தெரிய வில்லை. ஏதோ இனந்தெரியாத வேதனை இதயத்தைச் கட்டெறிப்பதை உணர்ந்தான். தாகமாக இருந்தது.

அவன் தண்ணீரைத் தாராளமாகக் குடித்தான். ஆனால் தாகம் தணிய வில்லை. நெஞ்சிலே மூண்டிருந்த துயரமும் வேதனையுமான தீ அணைய வில்லை. அன்று மாலை துயரத்துடன் கழிந்தது. இப்பொழுது மேலும் வளர்ந்து ஒரே பாழ் வெளியாகத் தோன்றிற்று. பொழுது போக மறுத்தது. துயரத்தால் குழம்பிப் பாழ்பட்டுப் போன அவன் உள்ளத்திலே திரும்பத் திரும்ப ஒரே கேள்விதான் எழுந்து கொண்டிருந்தது!

"தேன்மொழி விரைவில் குணமடைந்து விடுவாளா! அவள் மீண்டும் எப்பொழுதும்போல் மகிழ்ச்சியுடன் இருப்பாளா!"

இனியன் இதே சிந்தனையில் படுத்துக் கிடந்தான். தலைக்கு அப்பால் தலையணைக்குப் பின்னால் கைகளைப் போட்டுக் கொண்டு புருவங்களை உயர்த்தி மேலே உத்தரத்தில் பார்வையைச் செலுத்திக் கிடந்தான். உதடுகள் மூடியிருந்தன. விளக்கின் எண்ணெய் குறைந்து விட்டதால், தீபம் ஒரு கணம் பிரகாசமாக எரிந்து அணைந்துவிட்டது. அவன் இருளிலேயே இருந்தான். எவர் பேரிலும் அவனுக்குத் துவேஷமில்லை. அவன் மனம் யாதொன்றும் இல்லாத பாழாக இருந்தது.

என்ன நினைத்தானோ தெரியவில்லை. சட்டென்று எழுந்து அங்கு அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகத்தில் கையை ஊன்றிக் கொண்டு மௌனமாக எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தான். அந்தச் சமயத்தில் இருட்டில் இனியன் என்ன செய்கிறான் என்று பார்ப்பதற்காகச் சுந்தரியும் மாணிக்கமும் அரிக்கன் விளக்கை எடுத்துக் கொண்டு அங்கு வந்தனர். அவன் அவர்களைத் திரும்பிக் கூடப் பார்க்காமல் தேன்மொழியின் நினைவிலேயே மூழ்கி இருந்தான். அவர்கள் வந்த சுவடே தெரியாமல் திரும்பிச் சென்றனர்.

மீண்டும் இனியன் படுக்கையில் காலை நீட்டிப் படுத்தான். நெடுநேரம் படுத்துக் கிடந்தான். அப்படியே தூங்கி விட்டான். எங்கோ ஆழம் காண முடியாத பள்ளத்தில் வீழ்ந்து விட்டது போலக் கிடந்தான்.

தேன்மொழியுடன் பேசிச் சிரித்து மகிழ்வது போலக் கனவு கண்டான். கடற்கரையில் மணல் வெளியில் தேன்மொழியுடன் உட்கார்ந்திருந்தான். அவர்களுக்கு எதிரில் மாணிக்கமும் சுந்தரியும் உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

தன் உதட்டில் குறுநகை தவழத் தேன்மொழி இனியனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"தேன்மொழி! இதற்கு முன் நீ கடலைப் பார்த்திருக்கிறாயா!" என்று கேட்டாள் சுந்தரி.

தேன்மொழி சுந்தரியின் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. கடற்கரையை நோக்கிப் பாய்ந்து கட்டுமரத்தின் மீது மோதிச் சாடும் அலைகளையே கூர்ந்து பார்த்து அனுபவித்துக் கொண்டிருந்தாள். கட்டுமரத்தின் பாய் மரம் அங்குமிங்கும் ஆடியது. கட்டுமரம் உயர்ந்து தாழ்ந்தது.

"இல்லை. நான் கடலையே பார்த்ததில்லை, இப்பொழுதுதான் முதன் முதலில் பார்க்கிறேன்" என்றாள் தேன்மொழி.

"தேன்மொழி! உனக்குப் பாடத் தெரியுமா!" என்று கேட்டாள் சுந்தரி.

"அவ்வளவு நன்றாகப் பாடத் தெரியாது."

# தெம்பூட்டுகிறது

# காலையில் உபயோகித்தால்!

# மென்மை உணர்ச்சி

# மணிக்கணக்காய் மாறுது!

காஷ்மீர் பொக்கே டேல் எவ்வளவு தெம்பூட்டுகிறது! அந்த மென்மை உணர்ச்சி மணிக் கணக்காக நீடிக்கிறது! ஈரத்தை, உறிஞ்சி, அரிப்பும் புண்ணும் வராமல் தடுக்கிறது. குளுமை மணம், புத்துணர்ச்சி அளிக்கிறது.

கால்கேட் 1806 முதல்
தரத்துக்குப் பெயர்போனது

# காஷ்மீர் பொக்கே

## டால்கம் பவுடர்

### ஆண்கள் விரும்பும் நறுமணம்




CBG/15

"எனக்குக்கூட அப்படித்தான். ஆனால் நீ நன்றாகப் பாடுவாயாமே."

"யார் சொன்னார்கள்!"

"இனியர் தான்."

"அவர் மட்டும் தனியாக இருந்து கேட்டால் என் பாட்டு நன்றாக இருக்குமோ என்னவோ!"

"அப்படியானால் நீ இப்போது பாட மாட்டாய் என்று சொல்லு."

தேன்மொழி ஒரு தரம் எல்லாரையும் பார்த்து விட்டுச் சொன்னாள். "எல்லாருக்கும் மத்தியில் எனக்குப் பாட முடியாதுதான். ஆனால் நீங்கள் நன்றாகப் பாடுவீர்களாம். எங்கே ஒரு பாட்டுப் பாடுங்கள் கேட்கலாம்!"

"ஓ! நான் இப்போது பாடத்தான் போகிறேன்" என்று சொல்லிச் சுந்தரி தொண்டையை ஒருதரம் கனைத்து விட்டுக் கொண்டாள்.

இதுவரை லேசாக அடித்த காற்று திடீரென்று பலமாக வீசியது. கடற்கரை மணல்கள் காற்றில் எழும்பிப் பறந்தன. கடல் அலைகள் மலை போல புரண்டு வந்து கரையில் மோதின. திடீரென்று ஒரு அலை தேன்மொழி உட்கார்ந்திருந்த இடத்துக்கு வந்தது. "ஆ!" என்று அடித்து எழுந்தாள் தேன்மொழி. அதைத் தொடர்ந்து வந்த அடுத்த அலை தேன்மொழியை அடித்துப் புரட்டிக்கொண்டு கடலுக்குள் கொண்டு சேர்த்து விட்டது! தேன்மொழி கடலில் கலந்தாள்.

"ஐயோ! தேன்மொழி!" என்று அலறி அடித்துக்கொண்டு எழுந்தான் இனியன். எழுந்திருந்த அவசரத்தில் படுக்கையில் இருந்து விழுந்து விட்டான். அவன் கனவு கலைந்து விட்டது.

இனியனின் அலறலைக் கேட்டுச் சுந்தரியும் மாணிக்கமும் ஓடி வந்தனர். "தேன்மொழியைக் கடல் அடித்துக் கொண்டு போய் விட்டது!" என்று அலறினான்.

மாணிக்கம் அவனைப் பிடித்துத் தூக்கிப் படுக்கையில் உட்கார வைத்தான். "ஏதாவது கனவு கண்டிருப்பாய். கடலாவது அலையாவது, இங்கு அதெல்லாம் ஏது!"

"ஆமாம், கனவுதான் கண்டிருக்கிறேன். பொழுது விடியும் நேரத்தில் கண்டிருக்கிறேனே! என் மனசு என்னவோ போல் இருக்கிறது. இப்பொழுதே போய்த் தேன்மொழியைப் பார்த்து வர வேண்டும்" என்று துடித்தான்.

"ஆகட்டும். உன் தந்தை இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் இங்கு வருவதாகச் சொல்லிச் சென்றிருக்கிறார்" என்றான் மாணிக்கம்.

"காலை பலகாரம் சாப்பிட்டு விட்டுத் தேன்மொழியாள் வீட்டுக்குப் போகலாமே" என்று சொல்லிக் கொண்டே வந்தார் இனியனின் தந்தை.

"இல்லை, அப்பா! இப்போது பலகாரம் வேண்டாம். தேன்மொழியைப் பார்த்து விட்டு வந்து பிறகு சாப்பிடலாம்" என்றான் இனியன்.

"ஆமாம்; அவர் சொல்லுகிறபடியே தான் செய்வோமே!" என்றாள் சுந்தரி.

அடுத்த கணம் இனியன், அவன் தந்தை, தாயார், சுந்தரி, மாணிக்கம் எல்லாரும் தேன்மொழியின் வீட்டுக்குச் சென்றனர்.

** ** **

தேன்மொழி பரிசுத்தமான வெள்ளை உடையில் பட்டுப் பாயில் தரையில் படுத்திருந்தாள். அவள் தந்தையும் தாயும் அவளுக்கு அருகில் உட்கார்ந்து கொண்டிருந்தனர். இனியன், அவன் தாயார், தகப்பனார், நண்பர்கள் எல்லாரும் திடீரென்று அங்கு வருவார்கள் என்று தேன்மொழியின் வீட்டில் யார் எதிர்பார்த்திருக்க முடியும்!

அவர்களைப் பார்த்த தேன்மொழியின் தந்தையும் தாயும் திடுக்கிட்டு எழுந்தனர். பண்ணையார் தம் குடும்பத்தோடு தங்கள் வீட்டுக்குள் வந்து நிற்பதைப் பார்த்த தேன்மொழியின் தந்தைக்கும் தாய்க்கும் ஒரே வியப்பாக இருந்தது. அவர்கள் மிகுந்த மரியாதையுடன் எழுந்து நின்று அவர்களை அன்புடன் வரவேற்றார்கள்.

"டாக்டர் வந்தாரா, என்ன சொன்னார்!" என்று தேன்மொழியின் தந்தையைப் பார்த்துப் பரிவோடு கேட்டார் பண்ணையார்.

"கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். பேசவோ, எழுந்திருக்கவோ விடக் கூடாது. மிகவும் அபாயமான நிலையில் அவளுடைய இருதயம் இருக்கிறது" என்று சொல்லி மருந்து கொடுத்து விட்டுப் போனார்.

"மருந்தைக் கொடுத்தீர்களா!"

"மருந்தைச் சாப்பிட மாட்டேன் என்று பிடிவாதம் பிடிக்கிறாள்" என்று கவலையோடு சொன்னாள் தேன்மொழியின் தாயார்.

இதற்குள் தேன்மொழிக்கு அருகில் சென்று அவளுக்குப் பக்கத்தில் அமர்ந்து கொண்டான்.

இனியன் "தேன்மொழி! என் அருமைக் கண்ணே!" என்று கூப்பிட்டான்.

தேன்மொழி படுத்திருந்த அறை முழுவதும் வெளிச்சமாயிருந்தது. அறையின் எல்லாக் கதவுகளும் திறந்திருந்ததால் சூரிய வெளிச்சம் அறையில் பரவியிருந்தது. அறையின் மத்தியில் பண்ணையாரும் அவருடன் வந்தவர்களும் நின்றுகொண்டிருந்தனர். பண்ணையாரின் மனைவியும் சுந்தரியும் இனியனுக்கு அருகிலேயே தேன்மொழிக்குப் பக்கத்தில் அமர்ந்திருந்தார்கள். தேன்மொழி அவர்

களை எல்லாம் கண் திறந்து பார்த்தாள். இனியனை மட்டும் ஒருதரம் நிதானமாகப் பார்த்தாள். புன்முறுவல் பூத்தாள். கையைக் கீழே ஊன்றிக் கொண்டு எழுந்திருக்க முயன்றாள்.

இனியன் அவள் கையைப் பிடித்த வண்ணம் "நீ பேசாமல் படுத்திரு" என்றான். அவள் இனியனை உற்றுப் பார்த்தாள். அவள் கண்கள் மிகவும் விரிந்து விசாலமா யிருந்தன.

"இல்லை. என்னால் எழுந்திருக்க முடியும்" என்று சொல்லி எழுந்திருந்து உட்கார்ந்தாள்.

அங்கு வந்த பண்ணையார், "தேன்மொழி! உன் உடம்பு எப்படி, அம்மா இருக்கிறது!" என்று கனிவோடு கேட்டார்.

தேன்மொழி மௌனமாக அவரைப் பார்த்தாள். அவருக்கு என்ன பதில் சொல்லுவது என்று தெரியாமல் திகைத்தாள்.

"நீ ஒன்றும் கவலைப்படாதே. உன் உடம்பு குணமானவுடன் இந்த மாதத்திலேயே உனக்கும் இனியனுக்கும் கல்யாணம் நடத்த ஏற்பாடு செய்கிறேன்" என்றார்.

"ஆமாம், அம்மா! கவலைப் படாமல் இரு" என்றாள் இனியனின் தாயார்.

சிரித்த முகத்துடன் ஒரு தரம் தேன்மொழி பண்ணையாரைப் பார்த்தாள். "மாமா! உங்கள் மனம் மாறி விட்டதா! கடைசியில் நீங்கள் உண்மையான அன்புக்கு மதிப்புக் கொடுத்து விட்டீர்கள்! நான் பாக்கியசாலிதான்" என்றாள்.

களைப்பினும் தேன்மொழியின் தலை சுற்றிச் சுழன்றது. தேன்மொழி மிகுந்த உற்சாகத்துடன் பேசினாள். அவள் அப்படிப் பேசியதை அங்கிருந்தவர்கள் யாருமே பார்த்த தில்லை.

தேன் மொழி இனியனைப் பார்த்தாள். அவள் தள்ளாடுவதைப் பார்த்த இனியன் ஜாக்கிரதையாக அவளைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

"மாமி" என்றாள் தேன்மொழி. இனியனின் தாயாருக்கு அருகில் செல்ல முயன்றாள்.

இனியனின் தாயார் அவள் அருகில் சென்று "பேசாமல் படுத்துக் கொள், அம்மா! உடம்பை அலட்டிக் கொள்ளாதே!" என்றாள்.

"என்னால் உங்களுக்கு எல்லாம் ரொம்பவும் சிரமம்" என்றாள். சற்று நேரம் பேச முடியாமல் பெருமூச்சு விட்டாள்; திணறினாள்.

ஒருவாறு தன்னைச் சமாளித்துக் கொண்டு இனியனைப் பார்த்தாள். இனியனுக்கு அவள் பேச்சு செய்கை எல்லாம் விசித்திரமாக இருந்தது. எல்லையற்ற கவலையோடு அவளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"உங்களுக்காக வேண்டித் தாழ்ந்த குலத்தைச் சேர்ந்த என்னை தங்கள் வீட்டுப் பெண்ணாக எடுத்துக் கொள்ள உங்கள் பெற்றோர்கள் துணிந்து விட்டார்கள் உங்கள் அன்பால், உங்கள் உயர்ந்த பண்பால் சாதியே இந்த நாட்டை விட்டுத் தொலைந்து விட்டது" என்றாள் தேன்மொழி. எதையோ நினைத்துச் சந்தோஷப்பட்டவாறே தன் தலையையும் கையும் ஆட்டினாள். அவள் அழகிய முகத்தில் முத்து முத்தாக வியர்வை அரும்பியது. படுக்கையில் உட்கார்ந்திருந்த தேன்மொழி அப்படியே கொடி போல் துவண்டு சாய்ந்தாள். இனியன் சட்டென்று அவளைத் தன் மடியில் தாங்கிப் படுக்க வைத்துக் கொண்டான்.

இனியனின் மடியில் படுத்திருந்த தேன்மொழி அவன் கையைப் பற்றித் தன் கையோடு சேர்த்து வைத்துக் கொண்டாள். அவனைப் பார்த்துக் கன்னம் குழியச் சிரித்தாள். ஏதோ சொல்ல முயன்றாள். உடல் முழுதும் ஒரு நடுக்கம் உண்டாயிற்று. இனியனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்த தேன்மொழியின் கண்கள் மெதுவாக மூடி மூடித் திறந்தன.

ஏற்கெனவே அதிர்ச்சி அடைந்திருந்த அவள் இதயத்தில் இந்த எதிர்பாராத சந்தோஷத்தின் அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லை. அது அவள் உயிரையே பலமாகத் தாக்கி விட்டது. அவள் இறந்து கொண்டிருந்தாள்.

தேன்மொழியைப் பெற்றெடுத்த துர்ப்பாக்கிய தந்தை அவசரமாக டாக்டரை அழைத்து வந்தார். இனியன் மனம் ஒடிந்து உட்கார்ந்திருந்தான். மாணிக்கத்தின் காலடியில் சுந்தரி சோர்ந்து உட்கார்ந்து விட்டாள். பண்ணையாரும் அவர் மனைவியும் பதறிக் கொண்டிருந்தார்கள்.

டாக்டர் தன் முழு சாமர்த்தியத்தையும் பிரயோகித்துப் பார்த்தார். பயனில்லை. சிறிது நேரத்துக்குள் எல்லாம் முடிந்து விட்டது.

"என் தேன்மொழி இறந்துவிட்டாள்!" என்று உரக்கக் கூவிப் பரிதாபமாக அழுதான் இனியன். உச்சந்தலையில் ஏதோ தாக்கியது போல அவன் திடீரென்று மயங்கித் தேன்மொழியின் மீது விழுந்தான். அவள் முகத்தோடு தன் முகத்தைச் சேர்த்து வைத்துக் கொண்டு தேம்பித் தேம்பிக் குமுறினான். இதயமே வெடித்து விடும்படி விம்மி விம்மி அழுதான். புழுப்போல நெளிந்து துடித்தான்.

"அப்பா! அர்த்தமில்லாத சாதி வெறிக்கு என் அருமைத் தேன்மொழி பலியாகி விட்டாள்!" என்று அடிவயிற்றிலிருந்து கொதித்தெழுந்த நீண்ட பெருமூச்சுடன் இனியன் கதறினான்.

"நான் தான் பாவி! என்னுடைய சாதித் திமிர் தான் அவளைக் கொன்று விட்டது!" என்று முகத்தை மூடிக்கொண்டு கதறினார் பண்ணையார்.

சாதி வெறியின் கொடுமைக்குத் தன்னைப் பலியிட்டுக் கொண்ட தேன்மொழியின் தியாக உள்ளத்தைப் பற்றி மாணிக்கமும் சுந்தரியும் வியந்தார்கள். கண்களை மறைத்து வழிந்தோடிக் கொண்டிருந்த கண்ணீருடே தேன்மொழியின் களங்கமற்ற முகத்தையும், உறங்குவது போல் மூடியிருந்த அவள் கண்களையும், புன்னகையோடு பொலிந்து கொண்டிருந்த அவள் உதடுகளையும் பார்த்தார்கள். அவனுக்கு அருகில் நாட்டின் நல்வாழ்வுக்காக, மக்களின் மகிழ்ச்சிக்காகப் பாடுபட்டுக் கொண்டிருந்த பத்தரை மாற்றுத் தங்கம், சிந்தனைச் செல்வம், இமயம் போன்ற உயர்ந்த எண்ணம் படைத்த இனியன், நாதியற்ற குழந்தை போல, திக்கற்ற பாலகன் போல அழுது துடித்துக் கொண்டிருந்த கோலத்தைப் பார்க்க முடியாமல் பதறித் துடித்தார்கள்.

தேன்மொழியின் பெற்றோர்கள் அழுது புலம்பி ஆற்றாமையால் துடி துடித்தார்கள். இனியனின் தாயார் துக்க மிகுதியால் செயலற்றுச் செய்வதறியாது நின்று விட்டாள்.

திறந்திருந்த ஜன்னல் வழியாகக் காலைக் காற்று அடித்தது. காலதேவன் இறந்து போன தேன்மொழிக்குக் காணிக்கை செலுத்துவது போல அந்த இளங் காற்று செடிகளில் மலர்ந்திருந்த மலர்களை உயிரற்ற தேன்மொழியின் உடலின்மீது கொண்டு வந்து தூவியது. அறைக்கு வெளியில் மரத்துக்கு அடியில் கிடந்த உலர்ந்த இலைகள் காற்றின் வேகத்தால் பறந்து ஓடின. அது இந்த நாட்டை விட்டுச் சாதிப் பேய் காய்ந்த சருகாகிக் கலகலத்து ஓடுவது போலிருந்தது. (முற்றும்)

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
No 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.







# ஹிமாலயா புக்கெ பெர்ப்யூம்

சிறிது தடவிக்கொண்டால்

உங்கள் வசீகரத்தை அதிகரிக்கச்செய்கிறது




இந்த ஸெண்ட் தனி ரகமானது. இதன் சௌமியமான மணம் மிகவும் கவர்ச்சியானது. எல்லா இடங்களிலும் விஷயமறிந்தவர்கள் ஹிமாலயா புக்கெ பெர்ப்யூமைத்தான் தேர்ந்தெடுக்கிறார்கள்.

இன்னுமொரு
நேர்த்தியான
**இராஸ்மிக்**
தயாரிப்பு

HB. 23-50 TM

இராஸமிக் கம். லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.

**Regd. No. M. 4392**

*Registered as a newspaper in Ceylon*

# நாள் முழுவதும்



காலை வேளையில்



# புத்துணர்ச்சி



விளையாடின பின்



# அளிக்க...



இரவில்






குளுமையான, நறுமணம் கொண்ட

## ஹிமாலயா புக்கே பௌடர்களை உபயோகியுங்கள்

சரும சௌந்தர்யத்திற்கு ஹிமாலயா புக்கே ஸ்னோ



HBP. 11-50 TM இராஸ்மிக் கம். லிட்., லண்டன். இவர்களுக்காக இந்தியாவில் தயாரித்தது